# சிவராத்திரி புராணம்








பதிப்பாசிரியர்:

வித்துவான் சு. நாராயணசாமி

உ

நெல்லைநாதர் இயற்றிய

# சிவராத்திரி புராணம்




பதிப்பாசிரியர்:

வித்துவான் சு. நாராயணசாமி,

தேவகோட்டை.



வெளியீடு:

வார வழிபாட்டுக் கழகம்,

தேவகோட்டை.

உ

சிவமயம்

சிவபாதசேகரர், சைவசித்தாந்தப் புரவலர், தமிழ் வள்ளல்

உயர்திரு சேவு. மெய்யப்ப செட்டியார் அவர்களின்

## அணிந்துரை

உலகில் பல்வேறு சமயங்கள் உள்ளன. அவை யனைத்தும் நல்ல மார்க்கத்தைப் போதிக்கின்றன. சுருங்கக் கூறுமிடத்து, 'பரத்வம்' சொல்வதைத் தவிர ஏனைய ஒன்றாகவே இருக்கும். ஒவ்வொரு சமய நூல்களை எடுத்துக்கொண்டால் அவை பரத்வம் ஸ்தாபிக்கும் பொருட்டுத் தங்கள் சமயங்களே பெரி தென வலியுறுத்தும். இந்நூல் சிவராத்திரி புராணம் என்னும் ஓர் அரிய பெரிய நூல். அதனை மேற்கண்ட வாறு எண்ணிவிடக்கூடாது. ஏனென்றால் தங்கள் தங்களைப் பேசுவதைவிட நம்மிலும் தனியார்-ஏனைய சமயத்தவர் கூறும் சான்றுகளையே எடுத்துக் கொள்ளவேண்டும். அதனையே ஆங்கிலத்தில் 'Third party evidence' என்பர். 12-ஆம் பிங்கல நிகண்டு என்ற சமணமுனிவர் ஆக்கிய நூலில் பகவன் என்றமைக்கு முதற்கடவுள் எனப் பொருள் தொனிக்கும் வகையில் ஈசன் என்று முதலில் பேசப் படுவதாலும், உலக வழக்கில் தேவன் என்ற சொல் நம் பரமேஸ்வரனிடம் வரும்போது பெரியவன் என்ற வகையில் 'மாதேவன்' என வழங் கப்பெறுகின்றது. தனக்கு மேலானவன் ஒருவன் இல்லாததால் "சேர்ந்தறியாக் கையான்" எனவும் திருவாசகத்தில் மணிவாசகப் பெருமான் கூறுகின் றார். இதுபோல் பேசிக்கொண்டே போனால் மிக விரியும். இப்படிக்கான மாதேவனின் மஹோன்னத மானது சிவராத்திரி புராணம்.

இதனை எழுதியவர் நெல்லைநாதர். இந்நூல் கிடைப்பதற்கரியதாயிருந்ததை, தேவகோட்டை குறுநிலமன்னர் வழிவந்தவரும், நின்றும், இருந்தும், கிடக்கும்போதும், துயிலும்போதும் நற்சிந்தனை உடையவருமான உயர்திரு சோம. நாராயணன் செட்டியார் அவர்கள், தன் பெயரைக் குறிப்பிட விரும்பாத பெருந்தகை ஒருவர் மூலம், திரு. வித்துவான் சு. நாராயணசாமி அவர்களைக்கொண்டு இந்நூலை வெளியிட்டுள்ளார்கள். அன்னார் மிகச் சிறந்த பாண்டித்யம் உடையவர். அத்துடன் பழைய முறைப்படி எழுதும் வல்லுநர். ஆழ்ந்த புலமை உடையவர். நீண்ட காலமாகத் தமிழாசிரியராகப் பணியாற்றி, நல்ல அனுபவம் பெற்றவர். இது போன்ற பழம்பெரும் நூல்களைச் சிறந்த முறையில் பதிப்பித்து வருகின்றவர். அன்னார் இன்னும் இது போன்ற பல பெருநூல்களை வெளியிடவும் நீடுழி பன்னலம் எய்தி வாழவும் எல்லாம் வல்ல ஜெயங்கொண்ட சோழீசர் பெருமான் திருவடிகளை வழுத்தும்

தேவகோட்டை
16—6—66

அன்பன்,
**சேவு. மெய்யப்பன்.**



உ

சிவநெறிச் செல்வர்

உயர்திரு சோம. நாராயணன் செட்டியார் அவர்களின்

## மதிப்புரை

எனது ஆசிரியரும் தமிழறிஞருமான வித்துவான் சு. நாராயணசாமி ஐயர் அவர்களிடம் சிவராத்திரி புராணம் பாடம் கேட்கும் பேறு எனக்குக் கிட்டியது. பல்லாண்டுகட்கு முன்னர் வெளியான இந்நூலைப் பலரும் படித்துப் பயன்பெறும் வண்ணம் மீண்டும் பதிப்பிக்க வேண்டுமென்ற எங்கள் அவாவினைக் கீழப்பூங்குடி உயர்திரு. கூ. க. வயி. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் நிறைவேற்ற வலிய முன்வந்தது குறிக்கற்பாலது. அவர்கட்கும் முன்னின்று பதிப்பித்த என் ஆசிரியரவர்கட்கும், துணைபுரிந்த வித்துவான் சு. இராசேந்திரன் அவர்கட்கும் ஸ்ரீ சுவர்ணகாளீஸ்வரப்பெருமான் இம்மை மறுமைப் பேற்றினை நல்கப் பிரார்த்திக்கின்றேன். இந்நூலைத் தமிழ்ப் பெருமக்கள் படித்துப் பயன்பெறுவார்களாக.

அன்பன்,

**சோம. நாராயணன்.**

# பதிப்புரை

சீவமே பரம்பொருள். சிவசம்பந்தமுடையதே சைவம். அதனை அனுட்டிபவர் சைவர். சிவபரம்பொருளையடைய வழிகள் நான்குள. அவையாவன சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இவற்றைப் பற்றித் திருக்குற்ருல புராணம்

''தரையின் ஆலயம் வலமுதற் றிருப்பணி சரியை
கிரிசன் எம்பிரான் அருச்சனை புரிவது கிரியை
ஒருமை யுள்ளுறத் தியானமுற் றிருப்பது யோகம்
பொருவி லானுடன் இரண்டறக் கலப்பது போதம்''

இவ்வாறு கூறுகிறது, இந்நான்கும் சக்திகள். இச்சக்திகளைக் கொண்டே சிவத்தையடையவேண்டும். சக்தி இன்றேல் சிவன் இல்லை. இதுவே தத்துவம்.

தெய்வம் ஒன்றே, தெய்வ பேதங்கள் பல. எனவே விரதங்கள் பலவாயின. சிவனுக்குரிய விரதங்கள் எட்டென நூல்கள் கூறும். இவற்றிற் சிறப்புடைய விரதமே சிவராத்திரி விரதம். சிவராத்திரியின் பெருமையை வாதுளம், காமிகம், சுப்ரபேதம் முதலிய ஆகமங்களும், கந்தபுராணம் முதலிய நூல்களும் சிறப்பாகக் கூறுகின்றன.

''மறைகளிற் சாமம் மகங்களிற் புரவி
மகமலை களில்மக மேரு
நிறைபுனல் நதியில் கங்கையோர் ஐந்தாய்
நிகழ்ந்தபூ தத்தின் ஆகாயம்
முறைதெரி சுரரில் கருமுகி லூர்தி
முதன்மைபெற் றுயர்ந்ததே போல
அறைதரு விரதம் அனைத்தினும் உரைக்கும்
அரனிர வதிகமென் றறிமின்''

என்று இவ்விரதத்தை மிக மேம்படுத்திக் கூறப்பட்டிருக்கிறது. இந்தியா முழுவதிலும் இவ்விரதம் சிறப்பாகக் கொண்டாடப்பெறுகின்றது. நேபாளம், சயாம் போன்ற நாடுகளிலும் கூட இவ்விரதம் சிறந்த முறையில் அனுட்டிக்கப்படுகிறது.

பன்னிரண்டு கோடி லிங்கங்களை முறையோடு சென்று வழிபட்டால் எவ்வளவு சிறப்பான பயன் விளையுமோ,

அத்தகு சிறப்பான பயன் சிவநிசியன்று ஒரு லிங்கத்தை வழிபடுவதால் ஏற்படும்.

இத்தகு சிவநிசிப் பெருமையை எல்லோருமுணர்ந்து ஈடேறுதற் பொருட்டு நெல்லைநாதர் என்னும் வல்ல தமிழ்ப் புலவர் சிவராத்திரி புராணம் என்னும் சீரிய பெயரால் இந் நூலை எழுதி வெளியிட்டருளினர். கால வெள்ளத்தில் இந் நூல் யாவர்க்கும் கிடைப்பது அரிதாயிற்று. தமிழுலகு செய்த தவப்பயனாலும் நிதிநலம் சான்ற மதிநலம் உடைய மாண்புடைச் சிவனடியார்களின் பெருந்துணையாலும் இத் தகைய சிறந்த நூல்கள் தற்காலத்தில் வெளிவருகின்றன.

இந்நூல் வெளிவர நிதிநல்கிப் பெருந்துணை புரிந்த பெயர் விழையாப் பெருந்தகையாம் பேரன்பர் 'நிலவுலா விய நீர்மலி வேணியனின்' நிறையருளால் எல்லா நலனும் இனிதி னுற்று அளவில் பல்காலம் வையத்து வல்லாங்கு வாழ வழுத்துகின்றேன்.

உலகில் உயர்சமயமாம் சைவநெறி தழைத்தோங்கவும்' சங்கம் கண்ட துங்கத்தண்டமிழ் எங்கும் தன்னொளி வீசித் திகழவும் ஆவன செய்துவரும் சிவபாதசேகரர், தமிழ் வள்ளல் உயர்திரு. சேவு. மெய்யப்பசெட்டியாரவர்கள் கேட்டவுடன் தாமதமின்றி நாட்டமுடன் அணிந்துரை நல்கிச் சிறப்பித்தார்கள். அவர்கட்கும், இதுபோன்ற சமயச் சார்புடைய நூல்களை வெளிக்கொணர்ந்து, சைவப் பேருலகு செழித்தற்பொருட்டு, இளமை முதலே ஓயாது திருத்தொண்டாற்றி வரும் சிவநெறிச் செல்வர் உயர்திரு, சோம. நாராயணன் செட்டியாரவர்கட்கும் பெருநன்றி உரித்தாகுக.

சிவநிசிப் பெருமைதன்னைத் திருத்தமுடன் கற்போரும் கேட்போரும் ஈடில்லா இம்மை மறுமைச் செல்வங்களை இனிது பெற்றுச் சிவனருட் கடலில் திளைப்பரென்பது திண்ணம்.

இப்புராணம் இருக்கும் இல்லந்தோறும் இலக்குமிதேவி இனிது எழுந்தருளியிருப்பதும் உறுதி.

நலமே பெருகுக.

தேவகோட்டை
16—6—66

அன்பன்,
சு. நாராயணசாமி.

# சிவராத்திரி



"கால நிர்ணயம், மாசித்திங்கள் கிருஷ்ணபட்சம், சதுர்த்தசி இரவு பதினன்கு நாழிகை லிங்கோற்பவ காலம். இதுவே மகாசிவராத்திரி புண்ணிய காலம். கிருஷ்ண பட்சம் திரயோதசி 30 நாழிகைக்குச் சதுர்த்தசி வியாபிப்பது உத்தமம். திரயோதசி இரவு 11¼ நாழிகைக்குச் சதுர்த்தசி வியாபிப்பது மத்திமம். திரயோதசியில்லாமல் சதுர்த்தசி வியாபிப்பது அதமம். ஒரு காலம் அன்றையிராத்திரிக்கு அமாவாசை பிரவேசிப்பது பரியாய சிவராத்திரி. இந்த மகாசிவராத்திரி தினத்தில் நேரிடும் திரயோதசி பரம சிவத்திற்குத் தேகமாகவும், சதுர்த்தசி தேகியாகவும் அன்றிச் சத்தியாகவும் சிவமாகவும் கூறப்பட்டிருக்கிறது. சிவராத்திரி முதற்சாமம் முதல் நான்கு சாமங்களிலும் ஆத்மார்த்த, பரார்த்த பூசைகள் நடத்த வேண்டும். தானஞ் செய்ய வேண்டும், இதை மேற்கொண்டவர் நான்கு யுகங்களினும் முறையே விநாயகர், கந்தமூர்த்தி, பிரம, விஷ்ணுக்களாம். பலன் இம்மையில் சற்சன தானுதி சௌபாக்ய சம்பத்தும், மறுமையில் சுவர்க்காதி போகமுமாம். இது காமியம். நிஷ்காமிகள் இகத்தில் புத்தியும், பரத்தில் முத்தியும் அடைவர். (வாதுளம், காமிகம், சுப்ரபேதம் முதலிய)"

## மஹா சிவராத்திரி

"பிரம விஷ்ணுக்கள் பொருட்டுச் சிவமூர்த்தி இலிங்கோற்பவமாய் எழுந்தருளியபோது தேவர்கள் பூசித்த காலம் எனவும், ஒரு பிரமகற்பத்தில் சத்தி நாற்சாமத்திலும் சிவபூசை செய்து தாம் பூசித்த காலம் சிவராத்திரியாகவென

சிவமூர்த்தியை வரம் வேண்டிப் பெற்ற நாளெனவும், சத்தி விளையாட்டாகச் சிவமூர்த்தியின் திரிநேத்திரங்களை மூட உலகங்கள் இருண்டன. அக்காலந்துச் சிவமூர்த்தியைத் தேவர் வணங்கின காலம் எனவும், பாற்கடலில் தோன்றிய விடமுண்ட சிவமூர்த்தியை விடம் பிடிக்காமல் தேவர் இரா முழுதும் பூசித்த காலம் எனவும், ஒரு கற்பத்தில் அண்டங்களெல்லாம் இருள உருத்திரர் அந்த இருள் நீங்கச் சிவத்தைப் பூசித்த காலம் எனவும் பல புராணங்கள் கூறும்.'' - அபிதான சிந்தாமணி.

சிவராத்திரி - மகா சிவராத்திரி, யோக சிவராத்திரி, நித்திய சிவராத்திரி, பட்ச சிவராத்திரி, மாத சிவராத்திரி என்று ஐந்து வகைப்படும்.

1. மகா சிவராத்திரி:- மாசி மாதம் தேய்பிறைச் சதுர்த்தசி கூடிய பொன்னாள். இதனை மாகசிவராத்திரி என்றும் கூறுப.

2. யோக சிவராத்திரி:- திங்கட்கிழமை சூரிய உதய முதல் 60 நாழிகை வரை அமாவாசை திதியிருப்பதாம்.

3, நித்திய சிவராத்திரி:- ஓராண்டிலுள்ள வளர் பிறை தேய்பிறைச் சதுர்த்தசி நாட்கள் 24.

4. பட்ச சிவராத்திரி:- தை மாதம் தேய்பிறைப் பிரதமையன்று தொடங்கி 13, 14, நாட்கள் விரதமிருத்தல்.

5. மாத சிவராத்திரி:— இது வளர் பிறை, தேய் பிறை கொண்டு கணக்கிடப்படும்.

சித்திரை - தேய்பிறை அட்டமி, வைகாசி - வளர்பிறை அட்டமி, ஆனி - வளர்பிறைச் சதுர்த்தசி, ஆடி - தேய் பிறைப் பஞ்சமி, ஆவணி - வளர்பிறையட்டமி, புரட்டாசி - வளர்பிறைத் திரயோதசி, ஐப்பசி - வளர்பிறைத்துவாதசி,

கார்த்திகை - வளர்பிறைச் சப்தமி, கார்த்திகை - தேய்பிறை அட்டமி, மார்கழி - வளர்பிறைச் சதுர்த்தசி, மார்கழி - தேய்பிறைச் சதுர்த்தசி, தை - வளர்பிறைத் திரிதியை, மாசி - தேய்பிறைச் சதுர்த்தசி, பங்குனி - வளர்பிறைத் திரிதியை.

சிவராத்திரியன்று சிவபெருமானை முதல் ஜாமத்தில் பஞ்சகௌயத்தால் அபிஷேகித்து வில்வ அலங்காரம் செய்து தாமரை இதழ் அர்ச்சனை செய்து பொங்கல் நிவேதனம் செய்து ருக்வேததோத்திரம் செய்து வழிபட வேண்டும்.

இரண்டாம் ஜாமத்தில் பஞ்சாமிர்தத்தால் அபிஷேகித்து தாமரையால் அலங்கரித்து துளசி பத்திரத்தால் அருச்சித்து பாயசநிவேதனம் செய்து யஜுர் வேததோத்திரம் செய்து வழிபட வேண்டும்.

மூன்றும் ஜாமத்தில் தேனல் அபிஷேகித்து ஜாதி மல்லிகையால் அலங்கரித்து வில்வ பத்திரத்தால் அருச்சித்து எள்ளன்னம் நிவேதனம் செய்து சாமவேத தோத்திரம் செய்து வழிபட வேண்டும்.

நான்காம் ஜாமத்தில் கருப்பஞ்சாறு அபிஷேகம்செய்து நந்தியாவர்த்தத்தால் அலங்கரித்து நீலோத்பல அர்ச்சனை செய்து சுத்தான்னம் நிவேதனம் செய்து அதர்வண வேத தோத்திரம் செய்து வழிபட வேண்டும்.

எல்லாக் காலங்களிலும் பன்னிரு திருமுறைப் பாடல்களை ஓதவேண்டும். இவ்வாறுகச் சிவப்பேறு பெற வேண்டும்.

---

கதைச் சுருக்கம்

## (1) விட்டுணு வராகமாய் உதித்த கதை

உலகமெலாம் பிரளயத்தில் அழிவுறவே பின் திருமால் முன்போல் உலகத்தைப் படைக்க எண்ணி ஞன். திருமால், பிரமனைத் தன் திருநாபித் தாமரை யில் தோற்றுவித்துப் பின்னர் பாற்கடலில் பள்ளி கொண்டனன். பிரமன் உலகத்தில் உள்ள அனைத் துப் பொருள்களைப் பண்டுபோல் படைத்தனன். திரு மாலும் பிரமனும் தங்கள் உண்மை நிலையை அறிந்து கொள்ளாமல் படைத்தல் காத்தல் தொழில்களுக்குத் தாமே பரமகாரணர் என்று தருக்கி, மயங்கித் தங்க ளுக்குள் சண்டையிட்டுக் கொண்டனர். தங்களுக் குள் போர் புரிந்த பிரமதேவரது அகமும். திருமா லின் அகமும் இருண்டனபோல உலகமும் இருளத் தொடங்கியவுடன் தேவர்கள் முதல் யாவரும் பயந் தனர். இத்தன்மை நீடித்தால் உயிர்கள் அழிவுறுமே என எண்ணி, அவ்விருவருக்கும் உண்மை நிலை உணர்த்தத் திருவுளம் கொண்ட சிவபெருமான் அவர்கள் முன்பாக ஓர் ஒளிமலையாக நின்றனன். ஒளியின் பெருமை உரைக்கவொண்ணது.

பிரமனும் திருமாலும் ஒளியின் பெருமையை உணராமல், அவ்வொளியின் அடிமுடியறிய, திரு மால் பன்றியாகவும், பிரமன் அன்னமாகவும் உருக் கொண்டு புறப்பட்டனர். பலவாறு முயன்றும் முடி யாமல் சாலவும் இளைத்து மெய் சலித்து நொந்தனர். இருவரும் "எல்லையிலுகஞ் சென்ருலும் எம்பிரான் நின்னைக் காண வல்லவருளரோ" என்று வாழ்த்தி, மலர்கள் தூவிப் பலவாறு போற்றி நின்றனர். பின் னர் எம்பெருமான் தன் இலிங்க உருவைக் காண் பிக்க, அவ்விருவரும் பக்தியோடு பாதபூசை செய்

தனர். இருவரும் சிவனை நோக்கி "எம்பிரான் நின்னையெய்துமாறு இயம்பு" எனக் கேட்கவும், சிவபெருமான் சிவராத்திரி மான்மியத்தைக் கூற, அவ்விருவரும் அகமகிழக் கேட்டு, இறைவனிடத்தே பல்வரங்களும் பெற்றபின்னர்ச் சிவபெருமான் கயிலை மேவினர்.

## (2) அங்குலன் முத்தி பெற்ற கதை

பண்டு அங்குலன் என்னும் வேடுவன் இருந்தான். அவன் மிகக் கொடியவன். பல விலங்குகளுக்குத் தீமை விளைவிக்கும் வேட்டைத் தொழிலில் வல்லவன். அவனுக்கு ஒரு மனைவியும், இரண்டு குழந்தைகளும் உண்டு. அவன் ஒருநாள் விளங்கனி, தேன், மாமிசம் இவைகளை உண்ணவேண்டும் என்னும் ஆசையால் இரவில் சூலியை வணங்கி வேட்டையாடப் புறப்பட்டான். முதலில் முயல் வேட்டையில் முயன்று தளர்ந்தான். பின்னர் பயங்கரமான பல இடங்களிலெல்லாம் சென்று ஒரு புதரின் பக்கல், ஒரு மேட்டின் மேல் நின்று மிருகங்கள் வருவதை எதிர்நோக்கியிருந்தான். ஆனல் ஒன்றும் வரவில்லை. பின் பல பக்கங்களிலும் வில்லின் நாண் ஒலி எழுப்பி அம்புகளை எய்தான். ஒரு பக்கத்தில் கலைமான் இனத்தைக் கண்டான். அவைகளையும் பெற முயன்று கிட்டாமற் போகவே பசியோடு ஒரு வில்வமரக் காட்டில் சென்றுகொண்டிருந்தான். பகல் முழுவதும் சுற்றி ஒன்றும் கிடைக்காமையால் தன் மனைவியும், மக்களும் பசியால் வருந்துவரே' என்று எண்ணித் துன்புற்றான். சூரியன் மறைந்து இருள் சூழ்ந்தது. ஒரு வில்வ மரத்தின்மீது தங்கியிருந்தான். இரவில் தூங்கிவிடாமலிருக்கும் வண்ணம், வில்வ இலையை ஒவ்வொன்றாகப் பறித்துக் கீழே போட்டான். மரத்தினடியில் முனிவர் ஒருவர்

வணங்கி வந்த சிவலிங்கம் இருந்தது. அதன் முடியின் மேல் வில்வ இலைகள் விழுந்தன.

இங்கு இவ்வாறிருக்க, அங்குலன் மனைவி குழந்தைகளுடன் தன் கணவனுக்கு இரவில் என்ன நேர்ந்ததோ என எண்ணிப் பலவாறு புலம்பி அழுது எண்டிசையும் தனி நோக்கி மெலிந்து வருந்தி இருந்தாள்.

பொழுது புலர்ந்ததும், அங்குலன் மரத்தை விட்டு இறங்கி பல உயிர்ப்பொருள்களைக் கொன்று தசை, தேன் முதலியவைகளைக்கொண்டு தன் மனை சேர்ந்து மனைவி மக்களோடு மகிழ்ச்சியோடு பல காலம் வாழ்ந்து, தன் தொழிலைச் செய்துவந்தான். முதுமை தோன்றிப்பின் இறந்தான்.

இவன் விலங்கு முதலியவைகட்குச் செய்த தீங்கின் காரணமாக யமதூதர் இவனுக்குப் பல கொடுமைகளை இழைத்துக்கொண்டு சென்றார்கள். இதனை அறிந்த சிவபெருமான் விரைந்து தன் கணங்களை அனுப்பித் தன்பால் அழைத்துவரக் கட்டளையிட்டான். நந்திகணங்கள் வந்து யமதூதரிடமிருந்து அங்குலனை விடுவிக்குமாறு கேட்க, அவர்கள் நீதி கேட்டனர். நந்திகணங்கள், அங்குலன் இறைவன் மீது வில்வப்பத்திரம் இட்டுக்கொண்டிருந்த தன்மையையும், அதனால் அவன் சிவனருட்குப் பாத்திரமான சிறப்பையும் கூறவே யமதூதர்கள் அவனை விடுத்துத் தம் பதி ஏகினர் சென்று எமனிடத்து உரைத்தனர். எமனும் இறைவன் திருக்கயிலை அடைந்து, முறையிட்டான். இறைவன் அங்குலனாவன் சிவராத்திரியன்று இலிங்கமீது வில்வப் பத்திரம் சொரிந்து தூக்கமின்றி இருந்த தன்மையால் அவன் புறக்கரணமதால் பாவத்தை ஒழித்தானாதலின் அவன் சாலோகம் சார்ந்தான் என்றார். அவன் முற்பிறவியில் செய்த தவத்தால் சிவநிசி விரதத்

தூய்மையுற்ருன். அங்குலனுல் இறைவனைத் தரிசிக்கும் பேறு பெற்றேன் என்று இயமன் தன்பதி அடைந்தான். அங்குலன் கணநாதன் என வானவர் வணங்க நந்தி சிவமந்திரம் உரைப்ப, கின்னரர் யாழொலி இசைப்ப, கயிலாய கிரியில் இனிதிருந்தான்.

## (3) சூதுகுமரன் பதவி பெற்ற கதை

பல்வகை வளமும் பாங்குறப் பெற்று அமைந்தது குஞ்சாரபுரி என்னும் ஊர். அங்கே பரமுரஞ்சயன் என்று ஒரு மன்னன் இருந்தான். அவனுடைய புரோகிதன் மகன் சூதுகுமரன். பஞ்சமா பாதகச் செயல்களைச் செய்யும் பாவி. அதன் காரணமாக மன்னனுல் நாடு கடத்தப்பட்டான். தீயவள் ஒருத்தியோடு கூடி இழிசெயல் பல செய்து வாழ்ந்து வந்தான். இரண்டு பெண்களைப் பெற்று வளர்த்து வந்தான். உயிர்க்கொலை, பசுக்கொலை பல செய்து வந்தான், கோயில் முதலிய நிதி உள்ள இடங்களில் எல்லாம் பொருள்களைக் கொள்ளையடித்துவந்தான். வீடுகளுக்கு நெருப்பூட்டினுன். தான் பெற்ற மகளிர் மேல் இச்சைகொண்டான். அவர்களுக்கும் மைந்தர் பிறந்தனர். பன்னெடுங்காலம் இவ்வாறு வாழ்ந்து வந்தவன் தன் புதல்வரோடும் சென்று அந்தணர் அநேகரை வழிப்பறி செய்து வதைத்து வந்தான்.

காம்பிதேசம் சென்ருன். அங்கு வாழ்ந்து வரும் பொழுது இந்திரன் பதியை நோக்கி வணிகர்தம் நகரிலுள்ளார் பூசுவார் முடிப்பாராகிப் புதல்வர் மனைவியரோடு, சிவநிசி நோற்பச் சென்ருர்கள். சிவச்சின்னங்கள் தாங்கி ஆலயம் சென்று தெய்வச் சிந்தையோடு யோகத் தாழ்ந்திருந்தனர். பல்வகை மலர்களால் இறைவனை அருச்சித்து வேண்டித் துதித்திருந்தனர். இவ்வாருய காலத்தில் முன்னை வினை தள்ள மூர்க்கன் மதுவுண்டு வெறி மீறி வழி

தப்பி, இருள் வரவே தன் மனைவியர் அணிந்து கொள்வதற்காக மலர் கொய்தான். மேலே கண்ட பூசனை ஒலியைக் கேட்டு என்னவென்று ஆராய் வானாகி பூசை செய்யும் இடத்தை அடைந்தான். அங்கு 'கந்தமலி கொன்றையணி கண்ணுதலை நோக்கச் சிந்தனை யழுந்தவளர் சின்மய வயத்தால் அந்த மறையோன் வினைகள் யாவுமழிந்தன'.

அதன் இறைவனைக் கண்டு களிகூர்ந்து கதிர் கண்ட பனிபோல மண்டுவினையோட மதிவேணி யனை வாழ்த்திப் புண்டரிகமென் கழல்கள் போற்றி அயல் போனான், பின்னர்ச் சிறிது காலத்தில் அவன் உயிரைக்கொண்டு செல்ல இயமதூதர் வந்தனர். இயமதூதருக்கும் சிவகணங்களுக்கும் போர் நிகழ்ந் தது. சிவகணங்கள் சூதுகுமரனைத் தேர்மிசை ஏற் றிக் கயிலை சென்றனர். பின்னர், சித்ரகுப்தனை நோக்கி, மூர்க்கனின் செயலைக் கேட்டான் இயமன். அவனும் மூர்க்கனுக்கு நரகமே உரித்து என்று கூறப் பின்னர் இயமன் சிவனிடம் செய்தி கூறச் சென்றான்.

சூதுகுமரன் கயிலை சென்று சிவபிரானின் திரு வடிகளில் விழ்ந்து வணங்கினான். இறைவனும்,

"கன்னில் நஞ்சிவராத்திரி கண்டதால்
நண்ணி யெய்தினை நம்மடியாருடன்
எண்ணில் பாவமெலா மெரிந் தோடின
புண்ணியச் சிவரூபம் பொலிந்தனை"
இன்பமாம் சிவலோகத்தி னெய்தியே
அன்பரோ டமர் வாயென்றருள் செய்தார்.

## (4) இயமனுக்குச் சிவன் உபதேசித்த கதை

இயமன் தன் பரிவாரங்கள் புடைசூழக் கயிலை சென்று, பல தீமைகள் செய்த சுகுமாரன் கைலாச பதவி அடைந்ததைக் கூறி, தன் முத்திரையைச் சிவபெருமானின் முன்னிலையில் வைத்துப் பலவாறு போற்றித் துதித்தான். குழந்தையை நோக்கித் தாய் கேட்கும் தன்மைபோல் சிவன் இயமனை நோக்கி, நின் செயல் நல்ல முறையில் நடைபெறுகிறதா?' என்று கேட்டார். இயமன் நடுக்கத்தோடு, பல தீமைகள் செய்த சூதுகுமரன் கயிலாச பதவி அடைந்த தன்மையைக் கூறினன். 'அண்ணலே! புண்ணியம் புரிவோர்கள் புரையிலா விண்முதல் பல் புவனமும் மேவுவார், நண்ணுபாவர் நரகுறுவார் என நீ சொல் உரை அழிந்ததே, என்று சிவனை நோக்கி இயமன் சொன்னன். 'உன் அடியாரோடிருக்க வரம் அருளுதி' எனக் கேட்டான். சிவன் இயமனை நோக்கி, 'சிவராத்திரி நாளில் சூதுகுமரன் எம்மைக் கண்டதால் அவன் பாவங்கள் அழிந்தன' என்ருர்.

இயமன் சிவனை நோக்கி, சூதுகுமரன் சிவராத்திரி விரதம் நோற்கவில்லையென்றும், விரதம் மேற்கொண்டோரைப் பார்த்தானென்றும் கூற, சிவன் புன்முறுவல் செய்து 'சிவராத்திரி விரதம் மேற்கொண்டோரைப் பார்த்தாலே பாவங்கள் தீரும் எம் அருளுக்குரியோரிடம் அணுகாதே' என்று கூறினன். உடனே, இயமன் சிவநிசியின் பெருமையைக் கூறுமாறு கேட்டான்.

சிவன், ஒவ்வொரு திங்களும் சிவராத்திரி உண்டு என்று கூறினன். மாசித்திங்கள் சிவராத்திரி நாளில் பிரமன் நோன்பு நோற்றுப் பதவி பெற்ருன்.

பங்குனிச் சிவநிசியில் கேசவன் நோன்பு நோற்றுப் பல் வரம் பெற்றுய்ந்தான்.

சித்திரைச் சிவநிசியில் உமாதேவி பூசை புரிந்தாள்.

வைகாசியில் சூரியன் சிவநிசியில் பூசை செய்தான். ஆனிச் சிவரா த்திரியில் ஈசானன் பூசனை செய்தான். ஆடிச் சிவாராத்திரியில் முருகன் பூசனை செய்தான் ஆவணிச்சிவராத்திரியில் சந்திரன் பூசனைபுரிந்தான். புரட்டாசி சிவராத்திரியில் ஆதிசேடன் பூசை புரிந்தான். ஐப்பசி சிவராத்திரியில் தேவேந்திரன் பூசை செய்தான். கார்த்திகைச் சிவராத்திரியில் கலைமகள் பூசை செய்தாள்.மார்கழிச் சிவராத்திரியில் திருமகள் பூசை செய்தாள். தைச் சிவராத்திரியில் இடபன் பூசை செய்தான்.

இவ்விதமாகப் பன்னிரு திங்களுக்குரிய சிவநிசிப் பெருமையை இறைவன் கூறினன். சிவராத்திரிப் பெருமையைக் கேட்ட இயமன் மகிழ்வோடு தம் பதியை அடைந்தான். பின்னர் சிவராத்திரிப் பெருமையைச் சிந்தித்து, தன் ஏவலருக்கும் அதனைக் கூறி, சிவநிசி நோன்பு நோற்று வாழ்ந்தான்.



உ

திருச்சிற்றம்பலம்

# சிவராத்திரி புராணம்.

### காப்பு

வேக மானெறி சேரும் வினைகளும்
தாக சோகம் விடாத தளர்ச்சியும்
சோக வாரியி னுல்வரு துன்பமும்
போக யானைமு கத்தனைப் போற்றுவாம். 1

### விநாயகர் துதி

ஆர ணத்திடை யூறடை யாவகை
சீர ணத்தருஞ் செய்யுள் திருந்திடக்
கார ணப்பொரு ளாகிக் கருணைசெய்
வார ணத்தினை வாழ்த்தி வணங்குவாம், 2

### தில்லைவாணன் துதி

பொய்கண்டேன் பொய்கூடும் புலன்கண்டேன்
புலன்கொளுயிர் பொருந்தி வாழும்
மெய்கண்டேன் மெய்காட்டும் வீடுகண்டேன்
வீட்டின்பம் மிகவுங் கண்டேன்
மொய்கண்டேன் திருத்தில்லை வாணனுரு
ஐந்தெழுத்தும் முயங்கி வாழ்த்திக்
கைகண்டேன் மன்றுள்வரு கால்கண்டேன்
வினையொன்றுங் கண்டிலேனே. 3

திருந்தும் இன்பமும் சீர்தரு முத்தியும்
தருந்த வம்புரி தாழ்குழல் தன்னொடும்
இருந்த செஞ்சடை எம்பெரு மானிடம்
பொருந்து தில்லை வளநகர் போற்றுவாம். 4

என்னை இப்பிற விக்கட லின்றெடுத்
துன்னு வித்துணர் வாலயத் துள்ளுறத்
தன்னை வைத்தரு டந்த சிவபிரான்
மன்னு நற்புலி யூர்நனி வாழியே. 5

## சுப்பிரமணியர் துதி

செட்டி தேவர்கள் போற்றச் செனுபதிப்
பட்ட மேவிப் படையடை வாகவே
சுட்டு வாரணந் தொல்சிறை யாவையும்
விட்ட வீரம் விடாது விளம்புவாம். 6

## நூற்பயன்

மாசியின் அபர மீரேழ் வளர்சதுர் தசிஇ ராவில்
தேசியாம் சிவனுர் முத்தி அளித்தசீர் விரதம் தன்னை
ஆசையான் மொழிந்தோர் கேட்டோர் அருந்துயர் [ஒழிவர் என்றும்
நேசமாய் விரத நோற்பார் சிவபத நெறியிற் [சேர்வார் 7

## நூலாசிரியர்

மறைதொ ழும்சிவ ராத்திரி மான்மியம்
அறிவின் மிக்க அருந்தவர்க் காரிய
முறைசொல் சூதன் மொழிந்தன னற்றமிழ்த்
துறையி லோதினன் சூழ்நெல்லை நாதனே. 8

## பாயிர அத்தியாயம்

ஆதி வேள்விகள் செய்த அருந்தவர்
சூத னைத்தனி நோக்கியே சொற்றனர்
பாத கம்பழி பாவ மலங்களாம்
தீத றும்வகை செப்புமி னென்னவே. 9

(வேறு)

காய்ந்தபுற் சங்க மீது கனற்பொறி கதுவி னுற்போல்
மாய்ந்திடுஞ் செய்த பாவம் மாயைபன் மலங்க ளெல்லாந்
தீய்ந்திடுஞ் சிவன்றன் பாதஞ் சேரலாம் தெளிவும் உண்டாம்
ஆய்ந்தநல் விரதமொன்றுண் டருள்வன்யான் கேண்மின் என்றான் 10

(வேறு)

நன்னருரை சொன்னதனை நன்முனிவர் கேளா
அன்னவிர தப்பெருமை ஐயவுரை யென்ன
மன்னுமறை சொன்னதவ மாமுனி மகிழ்ந்தே
பன்னுகதை மானுடர் பவத்தினர மென்றான். 11

(வேறு)

மையார்குழ லுமையாளொடு மயிலூர்தியு மகிழப்
பையாடர வுடையானிது பகர்வான்மிகு பார்மேல்
மெய்யாய்அருள் கொடுவேதவி யாசன்சொலும்
[அதனைத்
துய்நாயக னருளால்உரை சொலுவேனுல குயவே.
12

(வேறு)

வேதி யர்க்கு மொழிந்த விதிதிகழ்
சாதி யர்க்குஞ்சண் டாளர்க்கு முத்தியாம்
தீதி லாச்சிவ ராத்திரி நோற்றிடின்
ஆதி யீசன் அடியிணை எய்தலாம். 13

பத்தி முத்தி பராபரை நல்லருள்
சித்தி யாம்சிவ ராத்திரி நோற்றிடின்
நித்தன் மாலயன் நேமியன் காணொணு
அத்தன் ஐயன் அருள்பதம் எய்தலாம். 14

வேறு வேறு விரதமும் வேள்வியும்
நூறு செய்து நொடிக்கினும் ஒக்குமோ
ஆறணிந்த அரன்கதி வேண்டினால்
தேறி நீர்சிவ ராத்திரி செய்மினே. 15

என்ற போதில் இருந்த அருந்தவர்
நன்று நல்ல விரத நமக்கிது
என்று நோற்ப திதன்வர லாறெலாம்
துன்று சீர்முனி சொல்கெனச் சொல்லுவான். 16



முதலாவது

# திருமால் வராகமாய்த் தோன்றிய அத்தியாயம்.

பூத மைந்தும் குலைந்து பொருப்பெலாம்
ஏதும் இன்றி இறக்கும் இறுதிநாள்
மாது பாகன் அருளினில் வான்மழை
மோத அண்ட முகடு நிறைந்ததால். 1

அண்டர் அண்டம் அழித்துல கேழையும்
கொண்டல் ஏழும் குரைகடல் ஏழுமே
மண்டி ஏறி மலைந்தபின் மாதவன்
பண்டு போலப் படைக்கவென் றெண்ணினன். 2

வேறு

ஏனம தாகி யெங்கும் நிறைந்தனன் எழிலி வண்ணன்
வானவர் உலகு நீடு மண்ணெடு மறைகள் எல்லாம்
தானருள் புரிய எண்ணித் தலமுழு திடந்த போது
கூனுடைக் கோட்டுப் பூமி கொழுநுனிக் கட்டி போலும். 3

வகைபெற வரைகள் எட்டும் வகுத்துமர நாகம் வைத்துத்
தொகையுடன் கரிநி றுத்தித் துலங்கிய புடவி நாப்பண்
மிகையறு மேரு நாட்டி வேதனை அழைக்க வேண்டி
முகமலர்ந் துந்தி மீதில் முளரிமா முகையை நோக்க. 4

வேறு

விண்ட லர்ந்தன தாமரை மென்மலர்
கொண்டல் வண்ணன் குறித்தருள் செய்யவே
பண்டு போல உலகப் படைத்திடத்
தண்டம் ஏந்திச் சதுமுகன் தோன்றினன். 5

தாற்று ளாயைத் தரித்தருள் தாணுவும்
நாற்றி சாமுகன் தன்னையும் நல்கியே
ஆற்றும் ஏழு கடலினுள் ஆர்வமாம்
பாற்க டற்கிடைப் பள்ளிகொண் டானரோ. 6

ஏக மாகி இருந்தவன் ஈறிலா
ஆக மங்கள் புராணமொ டாதிய
தாக வாஞ்சியின் நல்கித் தனிப்பொருள்
யோக முற்றனன் உய்பர்கள் உய்யவே. 7

சென்ற காலம் தெளிந்து திசைமுகன்
நின்ற காலமும் நீடெதிர் காலமும்
ஒன்று மின்றி இறந்த துலகெலாம்
நன்றி தென்று படைக்க நயந்தனன். 8

அண்டம் ஏழும் அடுக்கினில் வைத்துமேற்
கொண்டல் ஏழும் குரைகடல் ஏழுசீர்த்
துண்ட வெண்பிறை சூரியன் மாதிரம்
பண்டு போலப் படைத்தனன் பங்கயன் 9

ஆதி பூதத் தனுபவ நோக்கியே
சாதி பேதமும் தாபர சங்கமும்
தீதி லாத நதிசெகம் மற்றெலாம்
ஆதி நாயகன் அன்று படைத்தனன். 10

இந்தி ரன்முதல் எண்டிசைப் பாலருர்
மந்தி ரங்களும் மாதவ வேள்வியும்
அந்த ரங்களும் ஆறு சமயமும்
உந்தி யாளன் உலகும் சமைத்தனன். 11

தேவர் கின்னரர் சித்தர் இயக்கரும்
மூவ ரெண்ணம் கடந்த முனிவரும்
பாவி னேடு பலகலை நூல்களும்
நாவின் ஏறப் படைத்தனன் நான்முகன். 12

நல்ல நல்ல நவக்கிர கங்களும்
தொல்லை ராக்கதர் தும்புறு நாரதர்
எல்லை நிற்கும் இருபத் தெழுவரும்
வல்ல வல்ல வகையிற் படைத்தனன். 13

வேறு

தேவரும் முனிவர் தாமும் சிந்தர்கின் னரர்க டாமும்
யாவரும் வணங்கி ஏத்தி எம்பிரான் போற்றி என்று
பூமலர் சொரிந்து வாழ்த்தப் பொலன்செயா தனத்தி வர்ந்து
நாமகள் கொழுநன் நண்பால் நயந்துவீற் றிருந்த போழ்தின் 14

தான்படைத் திட்ட லோகம் சதுமுகன் பார்க்க என்று
வான்படைக் கலம் பரித்து வானவர் மருங்கு சூழக்
கான்படு தண்டி னோடும் கமண்டலம் தருப்பை ஏந்தித்
தேன்படர் அலங்கல் மார்பு திகழ்ந்திட எழுந்தா னன்றே. 15

விண்ணுல கிழிந்து கொண்டல் விரிந்தபாற் கடலின் நாப்பண்
நண்ணிய தென்ன வாங்கு நாகமாம் பாயல் மீது
புண்ணிய நாதன் யோக நித்திரை புரியக் கண்டே
அண்ணலும் அணுகி நீதான் ஆரிவண் எழுமின் என்றான். 16

வேறு

எழுந்திரு எழுந்திரினி ஏகபரன் நானே
செழுந்திரு விளங்குசுதை சேர்சலதி மீதே
கொழுந்துமிளிர் பச்சைவளர் கொண்டலது போல
விழுந்துயில்செய் கின்றனனி யாரென விளம்பாய். 17

என்றவன் இயம்ப இரு கண்துயில் இழந்து
மன்றலணி தண்துளவ மால்கடி தெழுந்தே
குன்றன புயக்குரவனைக் குறுகி இன்னே
உன்றனுடை நாமம துரைத்திடுதி என்றான். 18

அந்தவுரை ஏறுதலும் ஆலமென வெம்பிச்
சிந்தைமிக நொந்துகனல் சீறியிரு கண்ணும்
இந்திரவி மந்திரமும் ஏழுலகும் எல்லாம்
தந்தவன் எனச்சதுமு கன்தனி மொழிந்தான். 19

சிந்தை தெளி யாதசிறு வாமுதல்வ னுனே
உந்தனையும் உம்பருல கேழுமொளி ரேழு
மந்தரமும் வாசுகியும் மாருதமும் எல்லாம்
தந்தருள் புரிந்திலகு தற்பரமன் என்ருன், 20

கொண்டலுரை செய்யவளர் கோகனக மேலோன்
மண்டுமமர் செய்வலினி வாளமரில் என்னு
அண்டருடன் எண்டிசையும் ஆரணமும் எல்லாம்
கண்டுபணி கின்றவனெ என்றெதிர் கடிந்தான், 21

வேறு

ஆங்கவன் பகரக் கேட்ட அடலரி வெகுண்டு நோக்கித்
தீங்குடைச் சிறுவ னேநின் சிரத்தினைத் துணிப்பன் என்னுச்
சாங்கமும் சரமும் தண்டும் சக்கரம் சூலம் ஏந்தி
ஓங்கிய முகிலே போல எழுந்தனன் உலகம் உண்டோன். 22

வாங்கினன் சாபம் தன்னை வளைத்தனன் சிறுநாண் ஓதை
வீங்கின உலகம் எல்லாம் விம்மின திசைகள் எட்டும்
பூங்கடல் கலங்கி ஏழு புவிகளும் கிழிந்த பாரைத்
தாங்கின யானை வீழ்ந்த தகர்ந்தன வரைகள் எல்லாம். 23

தொடுத்தனன் பாண சாலம் தூங்கின மழையே போல
விடுத்தனன் மேக வண்ணம் வேதியன் தருப்பை தன்னுல்
தடுத்தனன் தடுத்த போது தாங்கிய உலகம் எல்லாம்
வெடித்தன மண்ணும் விண்ணும் வெந்தன முகில்கள் சாய்ந்த
24

சரமழை பரந்து பாயச் சதுமுகன் தருப்பை தன்னுல்
உருமென வீசி யார்ப்ப உம்பரும் வெருவி ஓட
எரிமடுத் திருவ ராலும் எரிந்தன உலகம் எல்லாம்
ஒருவரை ஒருவர் வெல்லார் அமர்செய்வா ருற்ற போரில் 25

தண்டு பிண்டிகை தோமரம் சக்கரம்
மண்டி வீசி மலைந்தனன் மாயவன்
கண்டு நான்முகன் கையிற் குசையினுல்
துண்ட மாகத் துணித்தனன் பாரின்மேல் 26

மிக்க கண்ணன் வெகுண்டது நோக்கியே
மைக்க டற்புவி வானகம் ஏத்துசீர்ச்
செக்கர் மேனிச் சிவனருள் வான்கணை
அக்க ணத்தின் அவன்மிசை தூண்டினுன். 27

வேறு

காயாமலர் வண்ணன்விடு கணையானது கனலாய்
ஓயாவெகு உருவாயுயர் மலையாயொலி கடலாய்
பாயாஉயிர் கொளவேவரும் இதுவாமெனப் பரிவின்
மாயேசுரம் என்னுங்குசை விட்டான்மல ரோனும்
28

வேறு

வந்து வந்து சரங்கள் மலைந்தன
சிந்தை வெங்கன லோடுறு தேவர்கள்
பந்தி பந்தி மடிந்தனர் பாரெலாம்
அந்தி வானகம் ஒத்த தமர்க்களம் 29

தெரிச ரங்கள் செறிந்தன திக்கெலாம்
எரிப ரந்தன எண்டிசைப் பாலரும்
கருகி வீழ்ந்தனர் காரொடு மீன்களும்
உருகி வீழ்ந்தன உய்வனு இல்லையால் 30

பண்டு பூதம் படைத்த பராபரன்
அண்ட மாயையி னிற்ப அரிஅயன்
மண்டு வன்சமர் வெங்கனல் மாற்றவும்
கண்டு பிஞ்ஞகன் ஒருருக் காட்டினுன். 31

அந்த ரம்முதல் அன்பர்கள் உம்பர்கள்
சிந்தை தோறும் நிறைந்தருள் சேவடி
வந்து பேரொளி யாயின வானகத்
திந்து கோடி இரவிபல் கோடிபோல் 32

மத்தி ராத்திரி மாசியில் தேய்மதி
பத்து நாலு திதியிற் பராபரன்
சித்தி யாகிய தேவரும் யாவரும்
முத்தி எய்த முளைத்தது பேரொளி 33

கூறின் நூறு கதிர்மதி கோடிகள்
பேரின் ஓரொளி யாயின பெற்றிபோல்
தேறு மாதவர் சிந்தையி லுற்றது
மீறி ஈரே ழுலகமும் விம்முமே. 34

உண்ணி றைந்தது லோக நிறைந்தது
கண்ணி றைந்தது கருத்து நிறைந்தது
எண்ணி றைந்தது எல்லையி லாதது
விண்ணி றைந்தது மிகுந்தது பேரொளி 35

வேறு

கரணமும் புலன்களும் கடந்த பேரொளி
மரணமும் சனனமும் மாற்றும் பேரொளி
இருளுறு மாயைகள் இகந்த பேரொளி
குருபரன் காட்டிய கோலப் பேரொளி 36

பேரொளி இலிங்கமாய்ப் பெருத்து நாடரும்
சீரொளி இருவரும் விடுத்த செஞ்சரம்
ஏரொளி கான்றுபுக் கேழு லோகமும்
ஊரொளி கவ்விமீ ஓங்கி யுற்றதே. 37

அவ்வொளிக் கொடுஞ்சரம் அடங்க ஆதியாம்
செவ்வொளி காரொளி திகழ்ந்த மேனியர்
இவ்வொளி என்கொலென் றெண்ணுஞ்
சிந்தையால்
அவ்வொளி அடிமுடி அறிய எண்ணினர். 38

எண்ணியே இருவரும் இசைந்து தங்களிற்
கண்ணையும் கருத்தையும் கடந்த பேரொளி
நண்ணிய தென்கொலாம் என்று நாடவே
எண்ணகைக் கோலமற் றெகினக் கோலமும். 39

எடுத்தனர் பூதலம் எயிற்றில் ஏனமாய்க்
கடுத்தனன் அரிஅடி தன்னைக் காண்கிலன்
உடுத்திரள் ஏழ்தல முலக மூடுற
அடுத்தனன் அயனொளி அணுக ஒட்டுமோ. 40

மாலதை ஆசையான் மருவிக் கண்டிலன்
மேலது தேடினன் வேதன் நன்மறைச்
சூலிதன் மலர்முடி தொடர்ந்து நாடினன்
சாலவும் இளைத்துமெய் சலித்து நொந்தனன். 41

வேறு

நாடியே அனந்த காலம் நான்முகன்
மாயன் காணுத்
தேடியே இளைத்து நொந்து சிந்தைநைந்
தழன்று மீண்டு
கூடியே நின்று தம்மிற் கோலமார்
ஒளியை நோக்கி
வாடினேம் சலித்தோம் கண்டால் வணங்குவம்
என்று சொன்னர்: 42

நல்லதென் றிருவர் தாமும் நயத்துடன்
ஒளியை நோக்கி
எல்லையில் உகம்சென் ருலும் எம்பிரான்
நின்னைக் காண
வல்லவர் உளரோ என்று வாழ்த்தியே
மலர்கள் தூவிப்
புல்லியோம் காண இன்றுன் பொற்பதம்
காட்டு கென்ருர் 43

மாலவன் வாம மீதும் மலரயன்
வலத்தி னின்றும்
சூலிதற் பரனே என்று தோத்திரம்
பலவும் சொல்லி
மூலமா முதலே எங்கள் மூர்த்தியே
பரனே வாரி
ஆலமே உண்ட கண்டா அரகர
போற்றி என்ருர். 44

அண்ணலே போற்றி போற்றி ஆகம
மறைகள் தேடும்
புண்ணிய நாதா போற்றி புலியத
ளுடையாய் போற்றி
எண்ணமும் விண்ணும் மண்ணும் கடந்தருள்
இறைவா போற்றி
கண்ணரும் பரமே போற்றி என்றனன்
கமல யோனி 45

விண்முதற் பூதம் ஐந்தும் கடந்தருள்
விமலா போற்றி
பண்ணிய உயிர்கட் கெல்லாம் பராபரா
போற்றி போற்றி
எண்ணரும் புவன கோடிக் கினிதருள்
முதல்வா போற்றி
கண்ணுதல் நாதா போற்றி என்றனன்
கமலக் கண்ணன். 46

நீதியே அனந்த காலம் நிகழ்ந்திட
அளவிட் டாலும்
எதுமொன் றறிய லாமோ எண்ணினில்
தொலேவும் உண்டோ
சோதியே மோன ஞான சுயப்பர
சுருதி காணு
ஆதியே அமலா போற்றி அரகர
போற்றி போற்றி 47

பூதியங் கரணம் நான்கும் புலன்களும்
கடந்த போதா
தீதிலா அறிஞர் என்றும் சிந்தனே
செயும்பொற் பாதா
ஆதியம் பொருளே எங்கள் ஆருயிர்க்
குயிரே ஞானச்
சோதியே உன்னே யாவர் அறிந்துளார்
சுருதி மூர்த்தி 48

வேறு

தொழுது நின்றவர் தோத்திரம் ஏத்தவும்
எழுதொ ணுத இலிங்க ஒளிமிசை
பழுதி லாத உமையொரு பாகமாய்
முழுதும் நாம்பரம் என்றவர் முன்னின்ருன். 49

ஐயி ரண்டு கரங்களும் ஆயிரம்
துய்ய சூரியர் கூடின சோதிபோல்
செய்ய மேனி உதிக்கவும் தேவரும்
வெய்ய பூதரும் மேவிடக் கண்டனர். 50

புண்ட ரீக விழிதுளி பொங்கவும்
புண்ட ரீகக் கரமுடி வைக்கவும்
புண்ட ரீகவாய் போற்றவும் தோற்றிய
புண்ட ரீகப் பதங்களேப் போற்றினர். 51

பூதம் ஐந்தும் ஒடுங்கிப் புகழ்ந்துநின்
ருதி யேயென் றடிதொழு தேத்தியே
நீதி சேரிரு தேவரும் நின்மலன்
பாத பூசனை பண்ணினர் பத்தியால் 52

பூவின் நான்முகன் மால்புடை நோக்கியே
தேவர் தேவன் திருவருள் செய்துபின்
காவ லாகவி ரேழு புவனமும்
மேவு நாயகம் என்னமுன் மேயினன். 53

வேறு

தம்பி ரானினி தருளவுஞ் சதுமுகன் மாயன்
எம்பி ரானினை எய்துமா றியம்பென வினவ
அம்பி ராவியன் சடைமுடி அண்ணலும் மகிழ்ந்து
பம்பி ராசிவ ராத்திரி மான்மியம் பகர்வான் 54

படைத்த ளிக்கவும் தத்துவ பதங்களும் பரந்த
அடற்க லங்களும் ஏந்திய அசுரர்கள் தன்மை
உடற்று ணிக்கவும் நல்வரம் இதற்குமுன் உளதாய்
முடித்த பத்தியின் விரதம்நீர் முயன்றிடும் என்றான்.
55

என்ற போதினில் இருவரும் இறைஞ்சிநின் றேத்திக்
கொன்றை மாலைவெண் பிறைநதி சடைமுடிக்
[கோவே
என்று நோற்பதும் நோற்றவர் எய்திடும் பதமும்
குன்ற ளித்தருள் குலக்கொடி கொழுநகூ றென்றார்
56

கேச வன்மல ரயினுடன் இருவரும் கேட்ப
ஆசி லாமறை முதற்பொருள் அகமலர்ந் திசைக்கும்
மாசி பின்மதிச் சதுர்த்தசி யாமினி மலியும்
தேசு லாஞ்சிவ ராத்திரி நோற்பவர் சிவமாம். 57

அந்த நாளேயிற் காலேயில் மஞ்சனம் ஆடி
வந்து தங்குரு பதமலர் வணங்கியே வழுத்திச்
சுந்த ரச்சிவன் கோயிலும் வலம்வந்து துதித்துச்
சிந்தை யாற்சிவ ராத்திரி நோற்பவர் சிவமாம். 58

அச்ச மானது தீரவே அகஞ்சுவர் மெழுகி
இச்சை யாகவே கோலங்கள் பலபல இயற்றிப்
பச்சை மாமணித் துகிலிவை பரிந்துடன் விதானித்
திச்ச கந்திகழ் வேதிகை மீதினில் இலங்கும் 59

நெய்வி ளக்குகள் பலபல திசைதொறும் நிரைத்து
கைவி ளக்கிய நவமணிக் குலங்களே நாற்றிக்
கைவி ளக்கொடு கணமலர் பத்திரஞ் சொரிந்து
மெய்வி ளக்கிய பவமெனும் வினகெட வணங்கி 60

வேறு

கரும்பு செந்நெல் கதலிதெங் கின்குலே
விரும்பி எங்கும் எழில்பெற வீக்கியே
அரும்பு மாலே அளிகள் தொடரவே
நெருங்க நாலுதி சையும்நி ரைத்துப்பின் 61

வில்வம் வெள்ளே எருக்கொடு மேன்மைசேர்
நல்ல குல்லே நலந்திகழ் சண்பகம்
முல்லே நெய்தல் முருக்கிதழ் பாதிரி
கொல்லே யிற்கர விரக்கு ழாங்கொள்பூ 62

பிச்சி மல்லிகை பிண்டிசெந் தாமரை
பச்சை நீலம் பருத்திபொற் கோங்கலர்
நொச்சி ஆரம்செவ் வந்திபுல் நுண்டுளாய்
இச்சை யோடும் இறைமுடி சாத்தியே 63

சாந்து சந்தனம் தண்பனி நீரொடு
சேந்த லிங்கத் திருமுடி சாத்தியே
வாய்ந்த சேவடி வாழ்த்தி வணங்கிமேல்
ஆய்ந்த சீர்த்திகள் ஆடியும் பாடியும் 64

உறக்கம் அன்றைக் கொழிந்து முடிவிலா
மறைக்கொ ழுந்தை வணங்கியும் வாழ்த்தியும்
நிறைந்த சீர்த்திகள் பாடியும் நின்மலன்
சிறந்த சேவடிச் சேவைகள் பண்ணியே. 65

நாலு சாமமும் சென்றபின் நாதனை
மாலை மாமலர் கொண்டு வணங்கியே
காலை தன்னிற் கனகம் அசனமும்
சாலும் அன்பினில் தானம் கொடுத்துமேல் 66

அற்றை நாளும் கடந்தபின் ஆதியைச்
சொற்ற நன்மலர் கொண்டு துதித்துமேல்
நற்ற வக்குரு தக்கணை நல்கியே
அற்ற தொண்டர்க் கமுதுபொன் ஈந்துமே. 67

பார ணைஅம வாசைமுன் பண்ணியே
பூர ணன்கழல் போற்றும் புராணமும்
சீர ணிந்த சிவன்பெருங் கீர்த்தியும்
ஆர ணம்முடன் கேட்டருள் கொண்மினே. 68

சீர்பெ றுஞ்சிவ ராத்திரிக் கொப்பெனப்
பேர்பெ றும்பல் விரதமும் பேசிடின்
மேரு வோடும் அணுவையும் மின்மினி
சூரி யன்றெளி நேரெனச் சொல்குமோ. 69

வேறு

பதிற்றி ரட்டியயோ டிரண்டதாம் வற்சரம் பயிற்றி
விதித்தி டுஞ்சிவ ராத்திரி விரதமும் விடுக்கின்
கதித்த தொண்டர்க்குக் கனகமும் கலிங்கமும் வழங்கி
மதித்தி டுஞ்சிவ ராத்திரி யொழிவது வழக்கே 70

மாவின் வேள்வியும் மன்னர்தம்
வேள்வியும் வகுத்துக்
கோவி னேடுபூ தானங்கள்
குறைவறக் கொடுத்தும்
ஆவ லோடுபோய்த் தீர்த்தங்கள்
ஆடினும் அரனும்
தேவர் தஞ்சிவ ராத்திரிக்
கொப்பிலை சிறிதும் 71

மாத ரார்பல மைந்தரைக்
கொன்றதும் மறைசேர்
வேத வேதியர் உயிர்களை
வதைத்ததீ வினையும்
கோதி லாதசற் குருமொழி
இகழ்ச்சியும் குலவும்
தீதி லாச்சிவ ராத்திரி
நோற்றிடின் தீரும் 72

என்று மாலயன் இருவரும் கேட்டிட ஈசன்
நன்றி கூர்சிவ ராத்திரி மகிமையை நவின்று
அன்ற வர்க்குநல் வரங்களும் ஏனவும் அருளி
வென்றி வெள்விடை யூர்ந்தொராக் கயிலைமே
வினனல். 73

பாவி னூல்பல தெரிந்திடும் அறிஞரைப் பார்த்துத்
தாவின் மேன்மைசேர் தவமுனி சூதனும்
உரைப்பான்
பூவி னன்முகன் மாலொடு புரந்தரன் நோற்றுத்
தேவர் தேவனர் திருப்பதம் சேரவும் பெற்றார் 74

காமன் நோற்றுமுன் கன்னியர்க் கரசியல் பெற்ருன்
நாம ஐங்கரன் நோற்றுமுன் நாயகம் பெற்ருன்
தாம வெட்சியான் நோற்றுமுன் சகலமும் பெற்ருன்
நாம வல்லியும் நோற்றுமுன் நண்பனை நயந்தாள் 75

செக்கர் மேனியன் திசைமுகன் அரிமுதல் நாடப்
புக்க பேரொளித் தெரிசன மாட்சியும் புரைதீர்
நக்கன் நன்னிசி நோற்றிடு பயன்களும் நணுகி
மிக்க இக்கதை கேட்பவர் வீடுபெற் றுய்வார். 76

திருமால் வராகமாய்த் தோன்றிய
அத்தியாயம் முற்றும்.



## இரண்டாவது
# அங்குலன் முத்திபெற்ற அத்தியாயம்.

---

சூதமுனி நைமிச வனத்தினுறு தொல்லோர்
மேதகு மனங்கொள விருப்புடன் உரைக்கும்
சீதமதி சூடுநட ராயசிவ நேச
நீதிவள ருஞ்சிவ நிசிப்பெருமை நன்றே. 1

வெண்ணெய்கமழ் வாய்விமலன் வேதன்முத லானோர்
எண்ணறு தவத்தினர்கள் யாவரும் இறைஞ்சப்
புண்ணியம் உருக்கொடு பொலிந்துசிவ சோதி
நண்ணுகயி லாயகிரி நம்பரன் அமர்ந்தான். 2

மைப்பொரு கயற்கணுமை மாதுமலர் நேரச்
செப்புயர் பதத்துணைகள் சென்னிகொடு தாழா
இப்புவி சிறக்குநெறி யேதென வினவ
அப்பிதழி மாமதி அணிந்தவன் உரைப்பான். 3

துங்கமிகு மாசிமதி தோற்றர னிராவில்
தங்கும்உண வின்றிமிகு தாபதர் ஒழுக்கம்
அங்கமொடு கொண்டெமை அருச்சனை புரிந்தோர்
நங்கயிலை மால்வரையின் நண்ணியுறை வாரே. 4

தீயகொலை செய்துதசை தின்றவர்க ளேனும்
நேயமதில் ஆதர நிசிப்பெருமை சற்றும்
ஆயஅறி வில்லவர்கள் என்னினும் அனங்கன்
மாயவலை யூடுபடி வஞ்சகர்க ளேனும் 5

உற்றசிவ ராத்திரியின் ஊணுடன் உறக்கம்
சற்றுமரு வாதுறு தவத்தினர்கள் யாரும்
அற்றமில் நமக்குழையர் அன்னபடி யான
பெற்றிசெறி நற்சரிதை பெட்புடன் உரைக்கேன். 6

வாமமயில் நீஉணர்தி என்றுமறை தேடும்
சோமன்அரி அங்கிவிழி கொண்டசுடர் கூறும்
தாமமணி பூவினுள சாகர புரஞ்சேர்
ஏமவன வாசனிடி என்னவுரை தீயன். 7

கங்குலெழு மேகநிகர் காத்திரன் முழங்கும்
சிங்கமுளி யங்கரடி சிந்துரம் நடுங்கத்
துங்கவடி வேல்பகழி தூவிவிளை யாடும்
அங்குலன் எனும்பெயர் அமைந்தவன வேடன். 8

வேறு

சங்குநன் மணியும் கவடியும் தழையும்
தயங்குசெங் குஞ்சியும் திரண்ட
கொங்கையும் இரண்டு குழவியும் உடைய
கொடிச்சியோ டிருந்துவாழ்ந் திடுவான்
வெங்கடுங் கானின் விளவின்வீழ் கனியும்
வேரியும் ஈசலும் தசையும்
கங்குலின் அருந்தும் காதலான் அச்சம்
கடந்தனன் கானகம் புகுவான். 9

செருப்புநேர் காலிற் சேர்த்துவெங் கையிற்
சீர்த்தவர் சிறப்புடன் ஏந்தி
நெருப்புநேர் கவரும் குஞ்சியிற் கவடி
நிறைதரக் குன்றிமென் பீலி
விருப்புநேர் அணிந்து குனிலும்வா ளிகளும்
மிக்கவா யுதங்களும் துணையாப்
பொருப்புநேர் தனமான் சூலியை வணங்கிப்
போயினன் வேட்டையங் குலனே. 10

வேறு

செடிபடும் அடவியின் வந்தொளிர் சிலைபல
கணைகள் தெரிந்துறு
நெடில்படு வளைதடி கொண்டுக ளிரைகவண்
அங்கையி னிலவிடத்
தொடைமிளிர் முடிமிசை வண்டிசை சுருதிகள்
பலசொல மிண்டிய
முடுவலொ டங்குல வனசரன் முயல்படு
கொலையின் முயன்றனன். 11

கட்டழல் பொருந்தும் கானகத் திடையே
கண்டிடும் சசமெலாம் ஓடி
இட்டதோர் வலையைக் கண்டுடன் நடுங்கி
ஏகவோர் முயலையும் காணான்
எட்டுள திசையும் புதர்களும் தடவி
யாதுதான் செய்வனென் றிரங்கிப்
பட்டிடு துயரால் கைவிரல் கடித்துப்
பரிந்தனன் பதைபதைத் துயிர்த்தான். 12

மடங்கலான் மடிந்த வாரணத் தொகையும்
வாரணம் ஒடித்தமா மரனும்
இடுங்கடுங் கரடி இடந்தன புற்றும்
ஈற்றுழை காலைநேர் கிருட்டி
இடைந்திடு தலமும் எரிவிழிப் பாந்தள்
ஈட்டமும் இணைமருப் பெருமை
படிந்தெழு சுனையும் வல்லியம் துயிலும்
பதுக்கையும் கடந்துடன் படர்ந்தான். 13

வேறு

கானிடை மருவிய வேடுவர் காவலன்
ஒருபுத ரின்புறம்
ஆனவொர் திடர்மிசை நின்றனன் அவ்விடை
மிருகம் அடைந்திடும்
நானவை கொன்றுடல் ஊனுகு செம்புனல்
நனிகொளு வனென
ஆனவை யும்பெற லின்றி வருந்தி
அயர்ந்துடன் ஏகினன். 14

வேறு

திண்கொண்டொளிர் சிலைகொண்டெழு
சிறுநாஞெலி பரவி
விண்கொண்டிட வருமங்குலன் விறலம்புகள் சிதறி
எண்கொண்டள விடலின்றிய எரிமண்டுறு
பொறிசேர்
கண்கொண்டுயர் துயில்கொண்டெழு கலைமானிரை
கண்டான். 15

கண்டங்கவன் மிகுவெஞ்சிலை கைக்கொண்டுற
வளையாப்
பண்டங்கிய குணநாஞெலி கொண்டேபல வாளி
எண்கொண்டிடு கலைமானினம் ஈரும்படி விடவே
தண்கொண்டிடும் அரமுற்றன சவரன்மனம்
அயர்வான் 16

வேறு

விட்டிடு விசிகம் பாய விரைந்தன
கலைகள் எல்லாம்
தொட்டிடு வில்லும் தானும் துயருறீஇச்
சவரர் கோமான்
பட்டதித் தகையோ வென்னுப் பசிக்கனல்
கொழுந்தச் சோர்ந்து
கட்டளி முரலும் வில்வக் கானகம்
படர்ந்திட் டானே. 17

வேறு

படர்ந்திடு கானத் திடமெலாம் சுற்றிப்
பகற்பொழு தங்ஙனம் கழிய
மிடைந்திடு தருச்சூழ் தடம்பொழி லெய்தி
மெல்லடிப் பாலரென் படுவார்
கடும்பசி கனற்ற நம்மனைக் கொடிச்சி
கலங்கிடு மெனமனம் பதைத்தே
அடுந்திறல் எயினன் வருந்துழி அருக்கன்
அத்தமால் வரையிடை அடைந்தான் 18

மருவிய ஞாலம் மன்னிவாழ் உயிர்கள்
மனமகிழ்ந் திறைஞ்சிட மிளிரும்
திருவளர் மேருச் சிகரமால் வரையைத்
தினந்தினம் வலம்வரும் அலரி
விரிகதிர் ஒளிரும் வனப்பெலாம் சுருக்கி
வேலைபுக் கொளித்திடக் கங்குல்,
கருகிய இருளில் கானகம் இருளக்
கடிதினவ் வெல்லையும் கடந்தான். 19

வேறு

மன்று ளீசனை வாழ்த்திலர் சிந்தைபோல்
துன்று பேரிருள் கண்டரி தும்பிவந்
தின்று கூடினும் என்செய்வ தென்றவண்
நின்ற மாமரம் ஏற நினைந்தனன் 20

மிக்க கூவிள மேவவவ் வேடுவன்
தக்க பாவச் சலதியின் வான்கரை
அக்க ணங்கடந் தேறலின் அம்மரம்
புக்கி ருந்தனன் புண்ணியத் தாற்றினல் 21

வேறு

இரவிருள் பெருக வரும்பசி எரிவுற
  விழிதுயில் வின்றிமுன்
அருமையின் உணவு துறந்தனன்
  அயர்விலன் அமர்தரு கூவிளை
உருவிய விலைபல அன்புடன்
  ஒருமுனி பணிய உவந்தடி
விரவிய நுதலொளி ரங்கணன்
  வியன்மணி முடியில் விழுந்தன. 22

வேறு

அந்தவனத் தவனிருப்ப என்செய் வேனென்
  றருங்கொடிச்சி அரும்பசியா லிரண்டு மைந்தர்
சிந்தைகலங் கிடவுயர்ந்த பரண்மே லாகிச்
  சிறுவருடன் மிகுதுயர்சேர்ந் துறங்கா ளாகி
அந்திவரும் பேரிருளை நோக்கி நோக்கி
  அரும்புலிகள் திரிதருகான் அடைந்தா ரின்னம்
வந்திலரென் மணநாதர் தரியா ரென்று
  மண்மகளும் நடுங்கிடவே மயங்கி வீழ்ந்தாள். 23

இருந்துவிழிப் புனல்பரப்பி மைந்தர் தம்மை
  எடுத்தெடுத்து மடியின்மிசை இருத்தி மோந்து
அருந்துணையே! கண்மணியே! அமுதே! தேனே!
  அரில்செறிகா னகம்புகுந்தார் உமது தந்தை
விரிந்தபெருங் கானகத்தில் உலவும் பொல்லா
  மிருகமவர் உயிருணவிந் திறந்திட் டாரோ
பொருந்துமுண வின்றியெவண் சென்றார் என்றப்
  பூங்கொடிச்சி தியங்கிநனி புலம்ப லுற்றாள். 24

வேறு

தஞ்ச மொன்றில தாகியே தனித்துடன்
வேகமாய்ச் சென்றூர்
செஞ்ச ராசனம் வாளிக ளின்றியே
தியங்கிடும் பொழுதில்
குஞ்ச ரக்குலம் சென்றுயிர் கொண்டவோ
கொலைத்தொழில் புரியும்
வெஞ்சி னக்கொடு வல்லியம் பாய்ந்ததோ
வென்றுளம் மெலியும். 25

கூனல் வான்பிறைப் பற்றிகழ் கூருகிர்க்
கவிழ்தலைக் கரடி
கான கந்தனி நடந்துள காதலன்
உயிரினைக் கவர
ஆன தான்மடிந் தார்கொலோ அடுங்கொடு
நீண்மருப் பேனம்
ஊனு கண்டிட மடிந்தனர் கொல்லென
வுலம்பியே இரங்கும். 26

புள்ளி சேர்பணை நேருடற் பணுமணி
பொதுளுநஞ் சுறைந்து
துள்ளு பற்பெரும் பாந்தளால் தொல்லுயிர்
உணர்வினை இழந்து
தெள்ளு மாமணி யனையவென் நாயகர்
சிதைந்தன ரோவென வலறித்
தள்ள ருந்துயர்ச் சலதியின் மூழ்கியே
ததும்பிநைந் துளநனி உலம்பும். 27

வேறு

விண்டுறுசெந் தேன்கடமை மிக்கதசை
கிழங்குவகை விரும்பி ஏனற்
பிண்டியுடன் மனமகிழ்ந்து தினமருந்திப்
பெட்பினுடன் வாழ்ந்த தெல்லாம்
கண்டுயில்வார் கனவாகிப் போனதுவோ
கலியுமினிச் சேர்ந்த தேயோ
எண்டகைய கண்மணியே தலைவாஎன்று
ஏங்கியிளை யாதமனம் அயர்ந்திட்டானே. 28

பாயாத வேங்கையந்தார் மார்பினனே
பகைவருயிர் பருகி நீண்டு
காயாவின் மலர்நிகர்த்துப் பொருப்பினைவென்
றுலம்பொருவும் கடகத் தோளாய்
வேயாரும் வனத்தடைந்தாய் விளிந்தனையோ
விம்மியடி யாள்மெ லிந்தே
ஓயாமல் அரற்றுமுரை கேட்டிலையோ
என்னினியான் உஞற்று மாறே. 29

பீலிமுடிப் பெருந்தகையே பெட்பினுடன்
அருள்புதல்வர் பேசும் இன்சொல்
சீலமும்அங் கவர்முகங்கள் திகழ்பொலிவும்
நினைந்திலையோ சிறந்து மேவும்
கோலமும்நீ செல்பொழுதே கூடியுடன்
சென்றதுவோ குலவு வென்றி
சாலுமென்றன் மணநாதா தனித்துயிர்நான்
உய்குவனே தமியள் என்றுள். 30

வேறு

ஒண்டொடி கங்குலின் இங்ஙனம்
உண்டியும் இன்றி யொளிர்ந்தெரி
மண்டுபெ ரும்பசி மிண்டுற
வண்டயில் வேல்விழி துஞ்சிலள்
பண்டியல் கின்ற பெரும்பரண்
மீதிரு பாலகர் தம்முடன்
எண்டிசை யுந்தனி நோக்கி
மெலிந்து வருந்தி இருந்தனள். 31

வேறு

பொங்கி புலைத்தொழில் தங்கிய வஞ்சகர்
புந்தியில் நின்ருெளியை
அங்கண் மறைத்த பவத்தை நிகர்த்த
அடுத்த இருட்டொகைசேர்
அங்குலன் இட்ட தழைக்கு மகிழ்ந்தருள்
அம்பர ஞமெனவே
செங்கதிர் வீசி உயிர்த்தொகை மீது
திவாகரன் வந்தனனே. 32

சிந்துநு ரைத்திரள் செந்துகிர் முத்தொடு
சிந்து கடற்றிரைசீர்
முந்து பணிப்பெரு ரத்தின மொன்றை
முழங்கிய வானிடையே
உந்தி எறிந்தென விண்டெனு மந்தரம்
உற்ற கடற்றிரையூ
டிந்திர பாண மறைந்த குடங்கர்
எழுந்தென வந்தனனே 33

சங்கொலி பம்பு கடற்கலே மாது
தரித்த கருப்புநிறம்
தங்கு படத்தை ஒழிப்ப முகத்தொளிர்
சார்தில கம்மெனவும்
அங்கு மறைத்தொகை நாடு பரம்பொருள்
ஐம்முக மூர்த்திதிருச்
செங்கையின் உற்றிடு நேமி யெனத்திகழ்
தினகரன் வந்தனனே. 34

வேத விதிப்படி அந்தணர் தந்திடு
மெய்ப்புனல் பெற்றணிசெய்
கோத வரக்கர் குலத்தை முடித்தொளி
கொண்ட பெருங்கருணை
ஆதப நாயகன் உற்றிட வானுடன்
அகிலமும் மேனிதளிர்த்
தேதமில் துஞ்சல் ஒழிந்தன மாதிரம்
இலகி விளங்கினவே. 35

அங்கல வேடுவன் அப்பொழு தேமரம்
அதனின் இழிந்தடலார்
துங்க மிகும்வரி வில்லுற வாளி
துரந்துயிர் கொன்றுதசை
அங்க ணெடுத்து மிகுத்த விருப்புடன்
அளிதொடர் தேன்வதையும்
செங்கை தரித்து விரைந்துதன் மாமனே
சேர்வன முற்றனனே. 36

வேறு

மண்டுபெருங் காதலுடன் எதிரே வந்த
 மைந்தரையும் மனைவியையும் மகிழ்ந்த ணைத்துக்
கொண்டுதடங் குடிலதனில் பிண்டி யோடும்
 குளநென்முத லானமைந்த உண்டி தின்று
பண்டையிலும் எண்மடங்காய் இருந்து நாளும்
 பக்தியுடன் விலங்கினங்கள் பதைப்ப வீட்டித்
துண்டுபுரி தசையருந்தி வேரி உண்டு
 சுலவிவழி மறித்தரிய சூறை செய்தான். 37

நெடுங்காலம் இந்தவகை அங்குலவே டுவன்புரிந்து
 நீதிமுறை உணர்கி லாது
படுங்காலை உடல்மெலிய ஆயுள்மிகப் பற்கழன்று
 கோல்தரித்துப் பழங்க ணீடத்
தொடுங்கால்கை சோரமிகு வாதபித்தம் சுருளவுடல்
 நடுநடுங்கச் சொற்ற ளர்ப்ப
அடுங்காலன் உயிர்கவரும் நாளும் சேர
 அறிவழிந்து சட்டகத்தை விடுக்கும்போழ்தின் 38

கண்டதிசை நடுநடுங்க வடவையங்கி
 கடைசிதறும் விழிநிரையும் கையிற் பாசம்
தண்டமிகு பரசுஎழுச் சூலம்வேல்நீள்
 தடியேந்தி யமதூதர் தயங்கு கின்ற
துண்டமதி போலெயிறும் துலங்க வந்து
 தோன்றியடித் துரப்பிமனை மக்கள் ஏங்கி
மண்டுபெருந் துயரமுற அங்கு லன்றன்
 மன்னுயிரைக் கணப்பொழுதின் வவ்வினரே 39

எல்லேயிலா நெடுங்காலன் தூத ராஞேர்
இவனுயிரை அங்ஙனமே கொண்டு போகச்
சொல்லுமடா தவமறியா வேடன் மார்பைத்
துளேயுமடா அழன்மீதே துவளக்காய்ச்சி
வெல்லுமெழுப்படைதிரித்து மோதி மோதி
வெந்தஅய நீர்செவியின் மேவ விட்டுக்
கொல்லுமடா ஐந்தெழுத்தைச் சொல்லா நாவைக்
கோதுமடா எனவருந்திக் கொண்டு சென்ருர். 40

திருந்துபுகழ்க் கயிலேமலேச் சினக ரத்தில்
தேவர்பிரான் இதையறிந்து நந்தி யென்னும்
அருந்தவனுக் கருள்புரிந்தே அங்கு லன்னே
அரியயம தூதர்மிக அச்சம் செய்தார்
விரைந்துகண்ம் தனேவிடுத்துப் பாசம் நீக்கி
விமானமதின் ஏற்றியிங்ஙன் வருவி யென்று
புரிந்தவுரைப் படிநந்தி கணங்கள் ஏவப்
போற்றியவர் தென்றிசையிற் புகுந்தா ரன்றே. 41

வேறு

நெடிய செஞ்சடை நின்மலன் ஆணேயால்
கடுகி வந்த கணங்கள் விரைந்துசென்
றடுந மன்படர் தம்மை யகற்றியே
விடுமின் வேடனே யென்று விளம்பினர். 42

வேறு

நாங்களருந் தவம்புரிவர் தம்மை யுற்று
　　நலிந்திடவும் ஐந்தெழுத்து நவிலா தாரை
நீங்கள் கொடுபோய் முத்திசேர்த் திடவும்
　　நீதிமுறை யுரைத்திடுமோ நிகரி லாத
தீங்குபெறும் அங்குலனும் வனத்திற் ஞேன்றிச்
　　செறிபறவை விலங்கினங்கள் கொன்று தின்ருன்
ஆங்குயமன் முன்கொடுபோய் விடுத்தால் நீங்கள்
　　அழைத்தேகு மெனக்கால தூதர் சொற்ருர். 43

பாடுபுகழ்ச் சிவகணங்கள் இதனைக் கேட்டுப்
　　பாம்பணியும் நம்பரன்மேற் பத்தி யில்லா
மூடன்மிகு கொலைபுரிந்து தசைய ருந்தி
　　மோகமயல் வளர்வேரி விரும்பி யுண்டு
காடதனிற் செல்பவரை வருத்து கின்ற
　　கடும்பாவி யாளுலும் காளம் உண்டான்
நீடிரவில் உணவுதுயில் இன்றி எந்தை
　　நிறைமுடியில் பத்திரமிட் டிருந்தா னன்றே. 44

விடையேறி மதியமுடன் இதழி சூடும்
　　வேதாந்தப் பொருளான விமல மூர்த்தி
திடமான அருளாலே அங்கு லனைச்
　　செய்யமணி விமானமதில் ஏற்றிச் செல்வோம்
தடையேதும் புரியாதீர் என்று கூறித்
　　தகைபாசப் பிணிப்பகற்றித் தவத்தோர் போற்ற
அடலாரும் வேடுவனை மானத் துய்த்து
　　அரன் கயிலை நோக்கியவ ரகன்ரு ரன்றே. 45

சிவகணங்கள் இந்தவகை கொண்டு செல்ல
சினந்திருகித் தடுத்தயம தூதர் தம்மைப்
பவன்முதலாச் சொலுங்கணங்கள் கோப மிஞ்சிப்
பதைபதைத்துத் துடிப்பஅவர் பரசு தண்டம்
தவரோடு நெடுவாளி.விடித்த டித்துத்
தகர்த்துமண்டை யுடைத்துதைத்து வுருத்த போதிற்
கவைசாரும் பதமேதி நாதன் வைகும்
கடிநகரை நோக்கியம கணங்கள் மீண்டார். 46

வேறு

ஒழுகுசெம் புனலும் வடுப்படு முடம்பும்
உரைதடு மாறிய மனமும்
அழுதொலி பரப்பும் வாயுமாய் மிக்க
அந்தகன் புரத்திடைச் சென்றோர்
தொழுதகை யுடனே தருமனை யடுத்துத்
துங்கமில் வேடனை யீசன்
விழுமிய கணங்கள் கவர்ந்துடன் சென்றார்
என்றனர் வேந்தனும் உணர்ந்தான். 47

பாகனை முருக்கும் பகட்டினில் இவர்ந்து
பரிசனர் பற்பலர் சூழ
மேகநேர் வடிவும் குஞ்சியும் சூலம்
விளங்குதண் டிலங்கிய பாசம்
வேகமார் வடவை யனல்பொழி விழிகள்
விளங்கநம் பராபரன் உறையும்
யோகமார் முனிவர் உளநிகர் கயிலை
ஓங்கலை நாடியே நடந்தான். 48

கவரிகா லசைப்ப மதிக்குடை நிழற்றக்
 காகளந் தண்ணுமை பீலி
திவழ்குட முழவு பம்பைமல் லாரி
 திமிலைதுந் துபியொடு தடாரி
புவனியெண் டிசையும் செவிடுறத் தருமன்
 புராதன வேதமென் ஞான்றும்
உவமைநா டரிய பரம்பொரு ளாகும்
 உமாபதி கயிலையிற் சென்றான். 49

மன்னுயிர்க் கறிவா யைந்தெனும் கலையாய்
 மந்திரம் பதங்கள்வண் ணமுமாய்
அன்னையாய் உலகுக் கப்பனாய் ஞானத்
 தான்தவ ரிதயவான் கோயில்
துன்னியாள் விமலன் சிவையொடு மருவித்
 தொல்லுயிர் படைத்தளித் தழிக்கும்
தன்னிக ரிடமாம் கயிலயஞ் சயிலத்
 தகுவளம் சிறிதுரை செய்வாம். 50

புரங்க டந்திடும் அகண்டமா முனிவர்
 புந்தியில் அனுதினம் பொருந்தும்
உரங்க டந்துமெய்ஞ் ஞானமே வடிவாய்
 உற்றிடு பொருளெலாம் தனது
கரங்க டந்திடு பிரபையாற் றெருட்டிக்
 கடவுளாம் விரிஞ்சனே முதலோர்
வரங்க டந்தருள் எனக்கர முகிழ்ப்ப
 வளர்வது கயிலைமால் வரையே. 51

நாட்ட மேலுறச் சமாதி யினியதி
  நனிவளர்த் தொன்றெனும் பொருளே
வேட்ட மைந்திடு தாபத ரீட்டமும்
  விழிவழி ஆனந்த வாரி
காட்ட நாண்மலர் கொண்டருச் சனைபுரி
  கடவுளர் கூட்டமும் கவின்சேர்
பாட்ட சைத்துரை நரம்புள ரோசையும்
  பயில்வது கயிலைமால் வரையே. 52

காளமுண் டிருண்ட மிடற்றினன் நெற்றிக்
  கட்டழல் வெம்மைபோய் உறலால்
பாளமா யுருகிச் செந்நிறங் காட்டிப்
  பாய்ந்திடும் பான்மதி யெனவே
கோளமார் பவள மாமணி சிதறிக்
  குமட்டிவெண் ணுரைத்திரள் புரட்டித்
தாளிநே ரருவி சரிதர நிவந்த
  சயிலமக் கயிலைமால் வரையே. 53

விண்டொடு மருப்புக் கூவிள நரந்தம்
  வேங்கைசீர் வெள்ளில்பொற் கொன்றை
வண்டுடன் ஞிமிறு தும்பிபாட் டயர
  மகரந்தம் திசைதிசை சிதறத்
தொண்டருக் கெளியான் சடையுறுங் கங்கைத்
  துளியுற மறைந்துடன் றேன்றும்
அண்டருக் கரிய சாரல்பெற் றுடைய
  தணிகெழு கயிலைமால் வரையே. 54

பஞ்ச பூதமும் அவற்றெழு புலன்களும்
பரவுகன் மேந்தியத் தொகையும்
துஞ்ச லின்றிய மனமுத னுன்கும்
துவக்கிலா தொளிர்பிர கிருதி
எஞ்ச லின்றிய அக்கினிச் சுரூபம்
இரணிய கருப்பவான் கலையின்
விஞ்சு மெய்ப்பொருள் எங்கணும் மிளிரிடம்
வெள்ளிமால் வரையெனும் பிறங்கல். 55

வேறு

இத்தகைக் கயிலைக் குன்றின்
இலகுபொற் சிகர நீடுஞ்
சுத்தமார் நகர வாயில்
தொல்லுயிர் உண்ணுங் காலன்
தத்துவப் பொருளைக் காண
வருதலுந் தவத்தோர் போற்ற
அத்தலை விமான மீதின்
அங்குலன் வந்தான் அன்றே. 56

அருமலர்த் தொடையன் மார்பன்
அங்குலன் நந்தி தேவர்
திருவடித் துணைவ ணங்கச்
சிவபிரா னருளி னலே
தருமனை வேடர் கோனைச்
சங்கரன் முன்ன ருய்ப்ப
ஒருமையாய்ப் பலவாய் ஆன்ற
உமாபதி சரணந் தாழ்ந்தார். 57

வேறு

தூவிதழி மலர்த்தொடையான் அடியிற் ருழ்ந்து
தொழுமளவில் நிறைமதியம் சூடும் எந்தை
தாவிலரு மறைநான்கும் தந்த வாயால்
தருமமனு வெனுமளவிற் றரும ஞரும்
நாவிரவு மறையினனே கயிலை யாண்ட
நாயகனே நஞ்சையுண்ட கண்டா தில்லைத்
தேவர்கடம் பெருமானே சிவனே மேருச்
சிலையவனே யென்றுதுதி செய்தான் மன்னே. 58

வள்ளல்தரு மன்புரி வணக்கமது கண்டே
தெள்ளமுத நேரவருள் செய்தக மகிழ்ந்து
கள்ளவிழ் மலர்த்தொடை கலந்துள புயத்தாய்
உள்ளகுறை சொல்கெனமுன் அந்தகன்
உரைப்பான் 59

சாகர புரத்தினயல் சாரொரு வனத்தின்
மோகர முடன்குலவு மூர்க்கனெரு வேடன்
சேகுறு பவத்தனுயிர் தேவநின தன்பர்
ஆகயிலை யுய்த்தனர்நம் மாணையை யழித்தார். 60

வேறு

இமையவரில் எனக்களித்த அரசு நாயேன்
இலகியநின் திருவருளால் இயற்று கின்ற
தமையுமென தேவலுறு தூத ராஞேர்
ஐயநின தேவலரால் அடியுண் டெய்த்தார்
உமையனையர்க் கினியவனே நஞ்சை யஞ்சா
துண்டவனே எனையுய்யக் கொண்டு காக்கின்
சமயமிது மலர்க்கழல்கள் பிரியா இன்பம்
தந்தருள வேண்டுமெனத் தாளில் வீழ்ந்தான்.
61

வீழ்ந்தபொழு தருள்சுரந்து விமல மூர்த்தி
விபுலேதனில் உயிர்கவரும் தரும வேந்தே
காழ்ந்தமனத் தினனெனினும் அந்த வேடன்
கருதரிய சிவநிசிசேர் கங்கு றன்னில்
சூழ்ந்தபவத் தொடக்கறுக்கு மிலிங்க மீதிற்
றுய்யவில்வத் தழைசொரிந்து துஞ்சா ஞகித்
தாழ்ந்தபுறத் கரணமதால் பாவம் சிந்தத்
தன்னிகரில் சாலோகம் சார்ந்தா னன்றே. 62

மந்திரத்திற் பிரணவநல் லக்கரத்தின்
அகரம்உயர் வருண நான்கின்
அந்தணர்மெய் வித்தைதனின் அரும்பிரம
வித்தையும்போல் அரியே ஆதி
அந்தரத்தோர் பரவுசிவ நிசிஅதுவே
விரதமதின் அதிக மாகும்
சுந்தரமார் அங்குலன்முன் செய்தவத்தால்
அவ்விரதத் தூய்மை யுற்ருன். 63

வேடனென மேதினியில் விளங்குமங் குலன்சீர்
விளம்புதிருக் காதைதனே விரும்பி நாளும்
தேடிமிக உரைப்பார்நல் விரத நோற்பார்
செம்மையா லிக்கதையை விரித்துச் சொல்வார்
நீடுபுகழ்ச் சரிதமது கேட்பார் யாரும்
நித்தியமார் நமதுழையர் நினேதி யென்றே
ஆடரவம் புனேந்தபிரான் எம்மை யாளும்
அண்டர்பிரா னமற்குரைத்து விடையு மீந்தான்
64

மறைதேட அரிதேட அயனுந் தேட
வளர்பவளப் பருப்பதத்தை மனத்தால் வாக்கால்
குறைதீரும் இருவிழியான் மதித்துப் போற்றிக்
கூசாது தரிசிக்கக் குவல யத்தின்
சிறைமேவு சாகரமா நகர வேடர்
செம்மலெனும் அங்குலனுல் இன்று பெற்றேன்
அறிவீரென் றியமபடர்க் கெடுத்து ரைத்தே
அந்தகனும் தென்றிசையி னடைந்து வாழ்ந்தான்
65

வேறு

மன்னுகண நாதனென வானவர் வணங்க
உன்னரிய நந்திசிவ மந்திரம் உரைப்பக்
கின்னர நரம்பிசை கிளர்ந்தழகு செய்ய
அன்னகயி லாயகிரி அங்குல னிருந்தான். 66

ஆயிர முகப்பணி பரித்தமல னன்பார்
காயிரத வாணனெலி இன்னிசை கலிப்பப்
பாயிர மறைத்தொகைசொல் பங்கயனும் மாலும்
ஏயரத தாளமுடன் மத்தளம் இயம்ப 67

தும்புரு வலம்புரி கடுந்துபி ஒலிப்ப
நம்புயர் சிவாகம நவின்றடியர் போற்றச்
சம்புசிவ என்றமரர் தாண்மலர் வணங்க
அம்புறு விடம்பயின் மிடற்றரன் அமர்ந்தான் 68

இனிதின் இக்கதை இன்புடன் ஓதினோர்
அனைய சீர்த்தியை அன்பு பெருகவே
வினவு வோர்கள் சிவநிதி மெய்ப்பயன்
தனைய டைந்து சிவபதம் சார்வரே 69

என்ன இக்கதை எண்டகு சூதனும்
மின்னு முப்புரி நூலணி வேதியர்
மன்னு புந்தி வளம்பெறச் சொற்றனன்
அன்ன காலை யருந்தவர் கூறுவார். 70

அங்குலன் முத்திபெற்ற அத்தியாயம்
முற்றும்.



மூன்றாவது

# சூதுகுமரன் பதவி பெற்ற அத்தியாயம்.

---

காதும் வேடுவன் காதையைச் சொற்றனே
பூத லந்தனில நோற்றவர் தம்புசழ்
சூத மாமுனி எவ்வகை சொல்கென
வேத வேதியன் மெய்க்கதை கூறுவான். 1

கபிலை கோடுறக் கார்வயல் ஊடுறைத்
திவலை யோடு தெறித்தருள் நித்திலம்
நவில்வ கோடல தின்றியு நாடெலாம்
விபுலை சூழ்தர மேதினி வீறதாம். 2

விந்த மால்வரை மேதினிக் குத்தரம்
அந்த நாட்டில் அணிகெழு மாநிதி
சந்த இப்பிகள் சங்கம் உகுத்தலின்
இந்து மெல்லொளி வீசும் இளம்பிறை. 3

பஞ்ச ராவிய மெல்லடிப் பாவையர்
தஞ்ச ராதிகர் மைந்தருஞ் சாற்றுறு
மஞ்ச ராவிய சோலைகள் வாவிசூழ்
குஞ்ச ராபுரி என்பதோர் கோநகர். 4

அந்த மாநகர் தன்னில் அமரர்கோன்
சந்த மார் அமராவதி சாலுமாற்
பந்தி பந்தி பரிகரி யானமும்
மைந்த ரோடு மகளிர் வளம்பெறும். 5

வேத சாலையும் வேள்விசெய் சாலையும்
மாத வங்கண் மகிழ்வுறு சாலையும்
தீதி லாத சிவன்பெருங் கோயிலும்
சோதி யோடு துலங்குறுந் தொன்னகர். 6

அன்ன மாநக ருக்கர சானவன்
மன்னர் மன்னன் வளம்பொலி வாழ்க்கையன்
மின்னும் வெண்குடை யன்மிகு வேள்வியன்
றன்ன தாணையிற் சக்கரம் ஓச்சுவான். 7

உரமு ரஞ்சிய தோளின னென்னலார்
சிரமு ரஞ்சிய தாளினன் செங்கையில்
அரமு ரஞ்சிய வாளினன் அண்ணலார்
பரமு ரஞ்சயன் என்றொரு பார்த்திவன். 8

அந்த மன்னவற் காக மாமறை
புந்தி யோடு பயிற்று புரோகிதன்
அந்தி வானவர் தங்குரு வாமவன்
சந்த வேதிகை யுந்தழ லோம்புவான். 9

புற்க ரந்தப் புரோகிதன் மாமகன்
நற்க ரந்த மனத்த னனுகருந்
தற்க ரம்பல வல்லவன் சாற்றொணுத்
துற்க ரன்பெயர் சூது குமாரனே. 10

பொய்ம யக்கு மனத்தன் புலைக்குணன்
மெய்ம யக்கறி யாதவன் வேட்கையான்
மைய னுண்ணிடை வாணுதல் மாதரைக்
கைம யக்கம் புரியக் கருதுவான். 11

மாத ரார்கள் மயங்க மதனநூல்
வேத நூலை விரும்பி மனங்கொளும்
பாத கன்பர தார மினிதெனச்
சூது பண்ணுந் துறைபடி வஞ்சகன் 12

முறைம யங்கி மூர்க்க னறிவிலா
மறமி குத்தவன் மாயப் பொடியினாற்
கறையு டற்கரந் தேகங்குன் மங்கையர்
உறைவி டத்தினு முன்புகும் ஊமைபோல் 13

வளையு நன்புகழ் மன்னவன் றென்னகர்க்
கிளைய வேதிய னெய்தலுந் தையலார்
வளைக ழன்றனர் வண்டுகண் மூடிய
அளக பாரஞ் சரிந்தன ரங்ஙனே 14

கலைநெ கிழ்ந்தன கைவளை சோர்ந்தன
நிலையொ ழிந்தன நெஞ்சம் அழிந்தன
உலையி லிட்ட மெழுகினை யொத்தனர்
வலையின் மானென லாயினர் மாதரே 15

மந்தி ரங்கண் மருந்துகண் மாயையாம்
எந்தி ரங்க ளியற்றிய வேதியன்
சுந்த ரங்கொண் முகங்கண்டு சோர்ந்தனர்
அந்த ரத்தி னருந்ததி போன்மினார் 16

கற்ப ழிந்தது காவல்செய் மங்கையர்
பொற்ப ழிந்தது பொய்யறு தையலார்
வற்க மான மதன்கலை நோக்கியே
நிற்கும் வேதியன் நெஞ்ச மருட்கையால் 17

பஞ்ச பாதகன் பாவி யிவன்பகை
வஞ்ச கன்தனை மாய்க்கவென் றெண்ணியே
விஞ்சை மாநகர் வேதியர் மற்றுளோர்
தஞ்ச மன்னனைச் சார்ந்தனர் சொல்லுவார் 18

மன்னர் மன்ன மடிந்தது மாநகர்
சொன்ன சொல்லறி யாச்சுகு மாரனுங்
கன்ம மானசண் டாளனைக் காண்பவர்
நன்மை யில்லை நரகமு மெய்துவார் 19

என்ன முன்ன மெரியெழு சிந்தையான்
அன்ன வேதிய னைக்கொண் டணைகென
முன்ன மேகொணர்ந் தெய்தலும் மூர்க்கனை
மன்னர் மன்னவ னேக்கி வகுக்குமால். 20

நின்ற வேத வொழுக்கினை நீத்தனை
இன்று நாண்முத லென்னக ரெல்லையில்
என்று மெய்தலை யென்ன மறையவன்
துன்று தாரவன் சொல்வழிப் போயினன். 21

வேறு

திக்கெலாம் புகழும் வேந்தன்
திருநகர் நீத்துப் பாவந்
தொக்கெலாம் நிறையப் பூண்ட
சுகுமாரன் போன தன்மை
தக்கண மூர்த்தி தேவன்
றனதரு ளணுக வன்பர்
மொய்க்குழாம் பாவ சாலம்
விரைந்தொழி கின்ற வாறே. 22

தன்னிடங் கழிந்தே அப்பாற்
றராபதி யெல்லை நீங்கிக்
கன்னுதிக் காடு சோலை
கடந்துவெஞ் சுரத்தின் மாடே
மன்னுயி ருடலை விட்டுப்
போயின மரபு போலத்
துன்னிய வினையி னேடுஞ்
சுகுமார னடந்து சென்ருன். 23

வேறு

கோடுறு களிறு பன்றி
கொலைபயி லாளி சிங்கம்
ஊடிய கலைகள் புல்வா
யுயர்புலி மரையி னோடு
நீடிய வனங்கண் மீதி
னெருங்கிய வினையி னோடும்
வாடிய வறத்தான் கானம்
வாழ்பதி யாகக் கொண்டான். 24

கண்ணினின் றொழுகு நீத்தங் கால்வழிப்
படர யாழின்
பண்ணுறு மொழியார் வேட்கை பலித்ததிற்
றிறம தேயா
நண்ணிய மகளிர் சேக்கை நணுகுநா
ளுளவோ வென்று
உண்ணெகிழ்ந் துருகி வாடியுன்மத்த
னாகி நைந்தே. 25

ஆங்கொரு பொய்கை சேர்ந்தே
அதனிடை யிளைப்பு மாறி
ஓங்கியெத் தன்மை யாலே
யூனுடல் வளர்ப்ப னென்னாத்
தீங்குறு களவு செய்யச்
சிந்தனை கொண்டு தேறிப்
பாங்குறு சோலை யொன்றி
னிருந்தனன் பதக னன்றே 26

வேறு

அன்னவ னிருந்தபொழி லவ்விட மருங்கே
மின்னென நுடங்குகொடி மெல்லிபுலை வல்லி
பொன்னுலக ரம்பைரதி பூமகளு மென்ன
அன்னமென மஞ்ஞையென ஆலமென வந்தாள். 27

கங்குலள கங்கரிய காளம்விழி கச்சார்
கொங்கைமத யானையிரு கோடென விளங்கத்
துங்கவிடை யில்லையென வண்டிசை தொடங்கக்
குங்கும மலர்ப்பொழில் குலாவிவர லுற்றாள் 28

வாவிமல ரன்னமென வந்தபுலை வல்லி
காவிடை யிருந்தகவின் மேவிய கரும்பு
ஓவிய தனுப்படை யொழிந்தமறை யோர்செய்
பாவவடி வைத்தனது பார்வையி னயந்தாள் 29

வந்தவளை வெஃகிமறை வேதியன் மகிழ்ந்தே
சுந்தர மனைத்துமொரு தொல்லுருவ மாகி
அந்தர விணைரமுத மானதொரு மானே
வந்துதமி யேனிடரை யாற்றியரு ளென்றான் 30

என்னலு மவன்வடிவை யெங்குமுற நோக்க
மன்மதன னைங்கணைகள் வாடையொடு மீற
வன்னமயில் போலவரு வாள்வடிவு கண்டு
கன்னல்மொழி யாளொடு கலந்திட நினைத்தான் 31

ஒருவர்மன மொருவருரை யொத்துடல மெங்கும்
இருவருயி ரொன்றியெழி லொன்றென நயந்து
உருவிருவ ரானவகை யொண்விழியி லோடி
மருவிவளர் காதலெனும் மாயவலைப் பட்டார். 32

## வேறு

உருவிரண் டாங்கு நீங்கி யொருவரை
யொருவர் நோக்கி
இருவருந் தம்மி லேதா மின்பமுற்
றினிது சேர்ந்து
மருவியே யிருப்ப மென்று மனமலர்ந்
துவகை பொங்கக்
குருகுமீன் றசைக டின்று குடிசையொன்
றமைத்து வாழ்ந்தார். 33

வடிவமை மங்கை யோடு மனமகிழ்ந்
தின்பந் துய்த்துப்
பொடிபடு தசைக டின்றும் புலாலுடன்
சுரைய ருந்திக்
கடிதுட ஞடிப் பாடிக் காமவேள்
வேள்வி யாற்றிப்
படிறுறு களவு சூதும் பயின்றனன்
பனவன் மாதோ 34

கன்ருெடு கலேகள் கொன்றுங் கனவுகள்
கவர்ந்து தின்றுஞ்
சென்றன சிலநாட் பின்பு தீமையே
நயமென் றெண்ணி
ஒன்றிய பாவமெல்லா முருக் கொண்ட
கன்ம சண்டன்
மன்றல்சேர் மனேயா டானு மானன
மகளி ரீன்ருள். 35

மானென நோக்கி மின்னு மகிழ்ந்திட
வான மீதின்
ஏனகை அரம்பை யென்னு மிருவரும்
வந்தா ரென்றே
ஊனுகர் மறையோ னண்ணி யுவந்துட
னெடுத்து மோந்து
பானமுந் தசையுந் தீற்றி வளர்த்தனன்
பரிவி னோடும் 36

தன்றிறன் மகளி ரோடுந் தாரைவாள்
சிலைகோ லேந்திக்
குன்றுடன் படுக டங்கள் குலவுசீர்
வனங்க டோறுஞ்
சென்றவ ருயிர்கள் சிந்தித் திசாமுகம்
பலவு மேவிக்
கொன்றிட மாய்ந்தோர் கோடி கோவதை
அனந்த கோடி. 37

வேறு

வலையொ டும்பல வாரவை கட்டியே
சிலைகொ டுங்கணை கொண்டு சினத்தினால்
நிலைய மிக்கவும் நின்ற விலங்கெலாம்
மலைவி லோடி மறிய விழுந்திடும். 38

விலங்கு புள்ளுகண் மீன்குலம் வேராறுத்
திலங்கு கோயி லிடித்துட னுட்புகா
நலங்கொண் மாநிதி நண்ணு மிடனெலாங்
கலங்க வந்து கவர்ந்துடன் மீளுமே 39

இல்லை வேத மொழுக்க மிழிஞர்தஞ்
சொல்ல லாது பிறிதிலைத் தொல்புவிக்
கல்ல தாலயத் துள்ளுறு கல்லென
வல்ல சிந்தனை செய்து மருளுமே 40

மெள்ள வந்து புகுந்துடன் வீடுகள்
பள்ளி கொள்பவர் சோதனை பார்த்துமேல்
உள்ள துள்ளது கொள்ள வுணர்ந்தவர்
கள்ள னென்னக் கடுப்பி னொளித்திடும். 41

காரி ருட்டிற் கனன்மனை வைத்திடும்
ஆர்கொ லென்பவ ராருயிர் வவ்விடுங்
கோர வீரர் குறித்துத் தொடரிற்றன்
ஊர தாம்வன மோடி யொளிக்குமே. 42

பாலி கந்து பசுவை வதைத்திடுஞ்
சீல வேதியர் தம்முயிர் செற்றிடுங்
கோல மாதரைக் கொன்று புதைத்திடும்
ஆல மென்ன வெகுண்டெழு மாவலால். 43

வேத பாரகர் கோடியின் மேலவர்
சாதி பேத வகையது சாற்றுறு
மாதர் தம்வதை யெண்ணிடின் மற்றதே
ஏத மேத மிவன்மனத் தூற்றமே. 44

ஆளி போல வளர்த்தன னைசைநோய்
மீளு மாறறி யானந்த வேதியன்
வாழு நாள்பல மாண்டபின் வஞ்சகஞ்
சூழ வேறோர் துறையினின் முன்னுவான். 45

கொல்ல வெண்ணுங் கொடுந்தொழில் வேதியன்
நல்க வந்தெழு நாரியர் நுண்ணிடை
வல்லி யென்னவும் வாய்ந்த முகுண்முலை
வல்ல தென்னவும் வாய்ப்ப வளர்ந்தனர். 46

தன்ம காரைத் தழுவிட மாசையால்
மன்ம தன்கணை பாய மயங்கியே
புன்மை யான புலைக்குண வேதியன்
வன்ம நெஞ்சின் வலிதி னணைந்தனன். 47

வேறு

அரிவைய ரிருவர் தம்மை ஆசையாற்
புணர்ந்த நாளிற்
பெருவலி மைந்தர் தோன்றப் பிரியமுற்
றுவந்து புல்லிக்
குருதியு நறவு மூட்டிக் குலவுசீர்ப்
புதல்வ ரோடும்
மருவியே சிறிது காலம் வாழ்ந்தனன்
வாழு நாளில். 48

வேதிய ரனேகர் தூசு வாங்குவான்
விபின பாதை
போதரப் புதல்வ ரோடும் போந்தவர்
பொருளை வவ்வி
மோதியங் கவரை மாய்ப்ப முடிகெழு
கவுட மன்னன்
நீதியார் நெறிக்குத் தப்பி நிறைகாப்பி
தேசம் புக்கான். 49

ஆங்கண மிது சின்னு ளரிவையர்
தழுவி வாழ்ந்து
பூங்குழல் மாத ரோடும் புதல்வர்கள்
பலரைப் பெற்றுப்
பாங்குறு மாந்த ரிந்தப் பாவிதன்
செயல்கள் கண்டே
ஏங்குறப் புவிக்குப் பார மாகியே
யிருக்கு நாளில். 50

வாசவன் பதியை நோக்கி வணிகர்தந்
நகரி லுள்ளார்
பூசுவார் முடிப்பா ராகிப் புதல்வர்பூங்
குழலா ரோடும்
மாசிசே ரபர பக்க மலிசதுர்த்
தசியி ராவிற்
றேசுலா மகிமை யான சிவநிசி
நோற்பச் சென்ருர். 51

குண்டல முருத்தி ராக்கங் கோலமார்
விபூதி சாத்தித்
தொண்டருக் கன்பர் பாதத் துணைகடந்
நெஞ்ச நாட்டி
அண்டர்பே ரழகு செய்வா னரன்றிருக்
கோயி லெய்திக்
கண்டுளி பனிப்ப யோகக் கடலகத்
தழுந்தி நின்ருர். 52

வேறு

பொன்னின்மணி புதுவெண்டுகில்
புனைமாமலர்த் தொடையுங்
கன்னல்வளர் கதலிக்குலை
காய்த்தெங்கொடு கமுகுஞ்
சொன்னந்திகழ் கயிலாசகி
ரித்தேவனைத் துதித்து
முன்னும்படி அரிதாஞ்சபை
முழுதுஞ்சிறப் பித்தார் 53

கொத்துப்பரி மளதாமரை குமுதங் கரவீரம்
மத்தத்தொடு துளபம்வளர் மல்லிக்குல மலருந்
தொத்தொத்திடு மந்தாரையுஞ் சூட்டிப்பர சிவனே
சுத்தத்தொளி ரொளியேயரு ளென்றேபலர்
துதித்தார். 54

வேறு

இன்னவர் ளின்னவகை யெய்துதல்செய் போதின்
முன்னைவினை தன்ளவரு மூர்க்கனியல் பாக
வன்னமது வுண்டுவெறி மீறிவழி தப்பித்
துன்னுமிருள் வந்துசுகு மாரன்மலர் கொய்தான். 55

தன்னுடைய தேவியர்க டாமமணி செய்து
வன்னமுறு கூந்தலின் முடிப்பமல ராய்வோன்
முன்னைமுத லைக்கருணை மூர்த்தியை வழுத்துந்
துன்னுதவ பூசனை துலங்குமொலி கேளா. 56

இந்தவகை யிவ்விரவி லென்னவென வெய்திக்
கந்தமலி கொன்றையணி கண்ணுதலை நோக்கச்
சிந்தனை யழுந்தவளர் சின்மய வயத்தால்
அந்தமறை யோன்வினைகள் யாவுமழி வெய்த. 57

கண்டுகளி கூர்ந்துகதிர் கண்டபனி போல
மண்டுவினை யோடமதி வேணியனை வாழ்த்திப்
புண்டரிக மென்கழல்கள் போற்றியயல் போனான்
வண்டுபடி முண்டக மலர்த்தொடையன் மாதோ. 58

வேறு

போயினன் .சிறிது காலம் பொற்கொடி
யோடும் வாழ்ந்தே
ஆயவ ணிருந்த வேலை யாருயிர்
கவர்வ தாகக்
காயெரி யென்னப் பொங்கிக் கயிற்றொடு
சூல மேந்தி
மாயைக டிரண்ட வென்ன வந்தனர்
மறலி தூதர் 59

இருட்பிழம் பனேக மாகி யெயிறெனும்
பிறைகண் மின்ன
மருப்புனே குஞ்சி யென்னும் வாடவ
முடிமே லோங்கக்
குருத்திகழ் தரந டந்த கோலமார்
கால தூதர்
தெருட்பொரு டன்னைக் காணுஞ் செல்வனை
வளைந்தா ரன்றே. 60

வேறு

எம்பி ரானரு ளுற்ற விருங்கணஞ்
செம்பொன் மால்வரை நேர்தரு தேர்கொடே
அம்பு விக்க ணணுகின ரம்புதி
வெம்பு தீயை விலக்குவ போலவே 61

நீற ணிந்தனர் நெற்றியிற் கண்ணினர்
மாறி லாதவர் மான்மழு வேந்தினர்
நூறு கோடியர் நுண்ணிதி னண்ணினர்
ஆற ணிந்த அரனருள் வாய்மையால் 62

எய்து மெல்லை யமன்விடு தூதுவர்
வெய்து கொண்டிடு வேதியன் தன்னுயிர்
ஐதெ னும்படிப் பாசத் தழுந்தவே
செய்த காலைச் சிவகணங் கண்டனர். 63

விடும்வி டுமிவன் வேதியன் மாதவன்
கடிநு கர்ந்தருள் கண்ணுதல் தம்பிரான்
அடிமை யாஞ்சுகு மாரனை யன்பிலாக்
கடியர் போலக் கருதலி ரென்னவே. 64

இந்த வண்ண மெதிர்ந்துரை செய்யவும்
அந்த கன்விடு தூதர் அறிந்துநீர்
வந்த வாறுரை யும்மென மாதவர்
இந்த வேதியன் தன்னிட மென்றனர். 65

வேறு

என்றவ ருரைப்பக் கேட்ட யமன்விடு
தூதர் சொல்வார்
இன்றிவன் செய்த பாவ மெண்ணிஞற்
றெலேவு முண்டோ
வன்றிறன் முதலே நாய்கள் வாலுடைப்
புழுக்க ளோரி
துன்றிய நரக மிந்தச் சுகுமாரற்
காவ தென்ருர். 66
ஆங்கவர் பகரக் கேட்ட அரன்றிருக்
கணங்க ளெல்லாம்
ஓங்கிய எரிபோன் மண்டி உருத்தெழக்
கண்ட தூதர்
ஈங்கிவ னுயிரை வவ்வும் யாவர்நீர்
சொன்மி னென்னப்
பூங்குழ லுமையாள் பாகன் பொன்னடித்
தொண்டர் சொல்வார். 67

வேறு

மாயனயன் மாமறலி வானவர்கள் கோமான்
ஆயவர்ப தங்களொடு வாழ்வையு மளிப்போன்
காயுமலர் வாளியுறு காமனே யெரித்தோன்
தூயசிவ ஞரடிமை யென்றனர்க டொண்டர். 68

உங்கடிரு மன்னனே உருத்தவன் வருந்தச்
செங்கமல நேர்தரு திருச்சரணி ஞலே
அங்கணுதை செய்தரு ளரன்கடு வருந்தும்
அங்கணர்த னக்கடிமை யாம்அறிதி ரென்ருர். 69

அன்னவர்கள் வெள்ளிமலை அத்தர்புகழ் கூற
மின்னும்வடி வாள்பரசு வேறரி கரத்தோர்
பின்னுமுறை நீங்குபடு பாவிபெரு மூர்க்கன்
தன்னுயிரி னைத்தருதி ரென்றெதிர் தடுத்தார் 70

மிக்கயம தூதருறு வீரநிலை கண்டே
அக்கமொடு கொக்கிற கணிந்த சிவத்தொண்டர்
தொக்ககடல் புக்கவட வைக்கனல் சுருங்கி
அக்கடு நமன்படை யடுத்தென முனிந்தார். 71

ஒன்றொருவர் விட்டகணை உம்பருல கெல்லாம்
பொன்றஎரி சிந்தமிகு போரது மலைந்தார்
குன்றுகுல மேருவொடு கோலமுகி லெல்லாம்
வன்றிறலி னோடெதிர் மலைந்தவகை யொப்ப 72

கையொடுகை யற்றுமிகு காறகர வீழ்வார்
மெய்துணிய மார்பினிடை வேலதனை யேவிச்
செய்யதலை கொய்துசெவி நாசிகள் சிதைப்பார்
ஐயன்விடு தூதர்எம தூதரை யடர்த்தே. 73

வாதமொடு மாதிர மலைந்ததென அம்பொற்
சோதிவிடு தொண்டர்எம தூதரை முருக்கப்
போதுமென வங்கமுறு போர்விசய மாறி
ஓதுபுகழ் மாமறலி யூர்கடி தடைந்தார் 74

நேசமிகு மாமறலி நின்னபயம் இன்றே
ஈசனுடை மாதவர்க ளெம்முட னெதிர்ந்து
பாசமொடு தண்டது பறித்துமறை யோனைத்
தேசுமிகு தேர்கொடவர் சென்றனர்க ளென்றார். 75

வேறு

அந்தகனவ் வுரைகேட்டு வடவைத் தீபோல்
அழன்றுளமே கொதித்தெழுந்து பழியே மிக்க
அந்தணனை வழிவிலக்கிக் கொண்டு போவா
ரவருயிரைக் கடிதுவவ்வி யன்பிலாத
அந்தணனைப் பாசமதி லமுந்த வீக்கி
அருநரகில் விடுப்பனென அகத்தி லுன்னி
அந்தகனுந் தனதுதொண்ட ரான தூதர்
அவர்முகம்பார்த் தொருமொழியை யறைவ
தானுன். 76

வேறு

உருமெனக் கொடிய பாவி யுயிர்கவர்ந்
தேகத் தீய
செருவடற் படைக ளேந்துஞ் சிவகண
நாதர் தம்மைப்
பொருமிட றணித்துச் சிந்திப் பூசுர
னுயிரை வவ்வி
வெருவரு நரகில் வீட்டும் மேலிவை
காண்டி ரென்ருன். 77

சண்ட னந்த வுரைகூறச் சதுமுகன்
கால காலன்
துண்டன் மிண்டன் பிறையெயிற்றன் சூரன்
வீரன் வரமாலி
பண்டன் சுவேதன் அணிமாலன் பகன
னந்த காசுவன்சீர்க்
குண்டன் மேக வணுதிக் குழுவாங்
கால படரெழுத்தார். 78

வாளொடு சூலம் வைவேல் வச்சிரம்
பிண்டி பாலம்
நீள்சரஞ் சவளஞ் சத்தி நிறைமழு
முசுண்டி சக்ரம்
ஆளவே யேந்திச் சென்றார் அந்தகன்
தூத ரப்போ
கோளுடன் சிவ கணங்கள் குறித்தெதிர்
மலைந்தா ரன்றே. 79

எரியெனச் சரங்க ளேவி யெம்பிரான்
தூத ரேற்ப
உருமுகில் வீழ்வ தென்ன வுடல்பல
கவந்த மாடக்
கருகினர் கால தூதர் கலங்கியே
முரிந்து சாய்ந்தங்
கொருவழி யொருவர் போகா ரோடின
ரூரை நாடி. 80

வேறு

பாசமுஞ் சூலமும் பறித்துக் கொண்டெமை
ஆசிலாப் படையினா லறுத்து வீட்டியே
மாசின னாகிய மறைய வன்றனைத்
தேசுடைத் தேர்மிசை ஏற்றிச் சென்றனர். 81

சிவகண மென்னவே செப்புஞ் சொல்லினைப்
பவமனக் காலனார் பரிந்துகேட் டுப்பின்
உவமையில் சித்திர வோது வேதியன்
தவநெறி யாதுநீ சாற்று கென்றனன். 82

என்னலுஞ் சித்திர னேற்ற சிந்தையின்
முன்னுற நாடியே முதல்வ கேளென
அன்னவே தியன்செய லனைத்துங் கூறியே
மன்னவ நாகவன் வாழ்க்கை திண்ணமே' 83

என்றவ னியம்பலு மெரிந்து அந்தகன்
நன்றுநன் றேகொலா நம்ம ஞேர்செயல்
என்றிதை யீசனுக் கியம்பு வேனெனச்
சென்றனன் கயிலையங் கிரியைத் தேடியே 84

ஈதிவ னேகலும் எம்பி ரான்விடுந்
தூதர்தஞ் செயலினைச் சுருக்கிச் சொல்லுவாம்
வேதியன் றனைமணி விமானத் தேற்றியே
தீதிலாச் சிதபதஞ் சென்றங் கெய்தினர், 85

வேறு

அண்டமெலாங் கடந்தபொருண் ஞான யோகம்
அறிவிபுத ரிதயமல ரமைந்தே எத்துந்
தொண்டினர்க டனையறிய வருளை நாட்டித்
தோகைமலை வல்லியிடப் பாகந் தோன்றப்
புண்டரிகன் திருமகிழ்நன் முதலே யான
புங்கவர்கள் அரகரவென் றடிகள் போற்றத்
தண்டரளத் தமனியப்பொற் கோயி னுப்பட்
சங்கரனர் வீற்றிருக்குஞ் சமயந் தன்னில் 86

வேறு

கோடி சூரியர் மாமதி கோடிகள்
கூடு பேரொளி யாயின கோலமே
பாடி மாலன்று தேடிய பாதத்தைச்
சூடி னன்சுகு மாரன் றுயர்கெட. 87

கண்ணில் நஞ்சிவ ராத்திரி கண்டதால்
நண்ணி யெய்தினை நம்மடி யாருடன்
எண்ணில் பாவ மெலாமெரிந் தோடின
புண்ணி யச்சிவ ரூபம் பொலிந்தனை. 88

இன்ப மாஞ்சிவ லோகத்தி னெய்தியே
அன்ப ரோடமர் வாயென் றருள்செய
என்ப ணிந்த இறையருள் கொண்டொரீஇ
முன்ப னத்துவ முத்தி முதிர்ந்தனன். 89

வேறு

முனிவிர்கா ளனேக பாவம் முதிர்ந்தவிப்
பிரஞ ரந்தப்
புனிதமாஞ் சீவ முத்தி பொருந்துமெய்க்
கதையைக் கேட்பார்
இனிதெனப் படித்தோர் யாரும் இகபர
சுகங்க ளெய்திக்
கனகவில் லாளி செம்பொற் கழலிணை
மருவு வாரே 90

சூதுகுமாரன் முத்திபெற்ற அத்தியாயம்

முற்றும்.



நான்காவது

# இயமனுக்குச் சிவன் உபதேசித்த அத்தியாயம்.

துய்ய வேதியன் காதையைச் சொற்றனம்
வெய்ய அந்தகன் மேருவில் லாளிசீர்
மெய்யி லங்கு கயிலையின் மேவியே
ஐயந் தீர்கதை தன்னை அறைகுவாம். 1

என்று சூத னிசைத்து மனங்கொள
வென்றி வேல்நமன் காதை விளம்புவான்
துன்று கால படரொடு சூரியன்
மன்றன் மாமகன் மைடமி வர்ந்தரோ. 2

பாச சூலம் பரித்துப் படரொளி
வீசு மாமணி மென்றுகில் சாத்தியே
ஓசை சேர்தரு மும்பர் வணங்கிடத்
தேசு லாவுந் திருநகர் நீங்கினான் 3

குடமு ழாப்பணை கொக்கரை தண்ணுமை
படக மேங்கின பம்பை யொலித்தன
வடிகொள் வேன்மற வீரரும் வந்தனர்
படிந டுங்கப் பருப்பதம் பாறவே 4

திக்க யங்கள் சிதறி மலைந்தன
மிக்க வேலை வெகுண்டு புரண்டன
தொக்க சேனைகள் சூழத் தொலைவிலா
நக்கன் வெண்கயி லாயத்தை நண்ணினான். 5

வேறு

கண்ணுதல் பாதங் காணக்
 கடுகியே வந்து மன்னன்
விண்ணுறு கிழக்கு வாய்தன்
 மேவுமா தவனைப் போற்றி
நண்ணின னடியே னென்று
 நவிலுதி சிவனுக் கென்றான்
புண்ணிய நந்தி சென்று
 புராரிதன் கழல்ப ணிந்தான். 6

எம்பிரான் பதங்கள் போற்றி
 யியம்புவான் நந்தி தேவன்
வம்புலாங் கொன்றை மாலை
 மதியணி சடையாய் மேரு
பைம்பொனார் சிலையா யின்றுன்
 பதம்பணிந் தேகக் காலன்
நம்பனே வந்தா னென்றான்
 நாதன்புன் முறுவல் செய்தே. 7

தருதிநீ நமனை யென்னச்
 சங்கர னருளைப் போற்றி
வருதிநீ யென்று நந்தி
 வகுத்தலும் மறலி யென்பான்
குருதிவே லுழவர் தம்மைக்
 கோயிலின் புடைநி றுத்திச்
சுருதியு முலகு மான
 சோதிசன் னிதியிற் புக்கான். 8

வேறு

அரியாதி யுயிராகி யுலக மாகி
யண்டமெலாங் கடந்தபொரு ளாகி நிற்கும்
பெரியானை மறைப்பொருளை யனந்த கோடி
பேதமெலாங் கடந்தருளும் பெருமான் தன்னை
வரைநேரு தனவனிதை யிடப்பா [லாக
வதியஅர கரவெனவே யடியர் வாழ்த்த
நிரைசேரு மிருவிழியான் மறலி கண்டான்
நித்தியமா ரானந்த நிறைவுற் ருனே. 9

வேறு

எம்பிரான் கணங்களோடு மிருந்தருள்
சபையின் மீதே
உர்பர்மண் மிசையி னுள்ளோ ருயிருணு
மறலி புக்கு
வம்புலா மலர்க டூவி வலம்வந்து
முக்காற் போற்றித்
தம்பிரான் தனக்கு முன்னே தந்தமுத்
திரையை வைத்தான் 10

வைத்தபின் ருெழுது கையான்
மலர்மழை சொரிந்து வாழ்த்தி
அத்தனே அமரர் கோவே
ஆதியே பரனே யோக
சித்தனே தெரியொ ணுத
தேவர்க டேவே ஞான
முத்தனே என்னை ஆண்ட
முழுமுதற் பொருளே போற்றி. 11

பூதமுங் கரண நான்கும்
புலன்களுங் கடந்தாய் போற்றி
வேதமுங் தேடிக் காணு
விழுப்பரம் பொருளே போற்றி
ஆதியா யந்த மாகி
யனுதியாம் முதல்வா போற்றி
சோதியே சுடரா யோங்குந்
தொலைவிலாப் பிழம்பே போற்றி 12

விண்முதற் பூத மைந்தும்
விளங்குமுக் குணமுந் தேறி
எண்முனி வோர்கள் சிந்தை
யிலங்கிய பொருளே ஞானக்
கண்மணி யொளியாய் நின்ற
காரண முதலே யோகர்
உண்மகிழ்ந் தியானத் தூடே
ஒளிருமெண் குணனே போற்றி. 13

வேறு

காலமுங் கருமமுங் கடந்த நித்தனே
சூலவெம் படையிறைய் துலங்கு பாற்கடன்
மேலெழு விடத்தினை விரும்பி யுண்டருள்
நீலகண் டாநம நிமலமூர்த்தியே. 14

என்றிவன் பன்முறை யிறைஞ்சி யேத்தலுங்
கொன்றைமா லிகையணி குளகன் தன்னெதிர்
நின்றிடு நமன்றனை நோக்கி நின்செயல்
நன்றதா வுலகினில் நடந்த தோவெனு. 15

குதலைவாய் மொழிமகார் கூறு மின்சொலை
அதிவிருப் பாகவே யாயு மன்னைபோல்
மதலைவே ணியன்சொல மறலி கைதொழா
விதிர்விதிர்ப் புடளிவை விளம்பு வானரோ. 16

வேறு

விந்தமால் வரையி னுத்தர திசைக்கண்
விளங்கிடுங் குஞ்சர நகரின்
வந்துதோன் றினனன் மறையவர் நெறிகள்
வழுக்கிய தீயதோர் பாதகன்
அந்தவந் தணனின் பெயரினை மொழியி
னருஞ்சுகு மாரனு மவன்செய்
சந்த மில்லதோர் பாவத்தின் தொகையினைச்
சாற்றுமா றெங்ஙன மையா 17

வேறு

வேத வேதியர் தம்வதை வேறுள
மாதர் தம்வதை கோவதை மற்றுள
ஏத மேத மிவன்புரி தீவினை
பாத கங்கள் பகரி னனந்தமே. 18

முறையி கந்து முகுண்முலை மக்களை
வெறிகொள் பித்தரின் மேவி அணைந்தனன்
அறிவு நற்செய லானவை யாவையும்
அறிகி லாவை னண்ணலி துண்மையே. 19

அந்த விப்பிர னுவியொ டுங்குநாள்
முந்து மென்னுடை தூதரை மொய்ம்புடன்
சிந்தி யேசிவ நாதநின் தொண்டர்கள்
பந்த நீக்கிப் பரகதி உய்த்தனர். 20

புண்ணி யம்புரி வோர்கள் புரையிலா
விண்மு தற்பல் புவனமு மேவுவார்
நண்ணு பாவர் நரகுறு வாரென
அண்ணல் நீசொல் லுரையு மழிந்ததே. 21

இந்த வாறுறி னென்னர சென்பெறுங்
கொந்து லாவிய கொன்றை யணிசடை
அந்த ணனெனக் கன்றருண் முத்திரை
முந்து சன்னிதி வைத்தனன் முன்னரே. 22

தரும னும்பெயர் தன்னை யிழந்தனன்
பெருகு மிவ்வர சாட்சியைப் பேணலேன்
உருகு தொண்ட ருடனுற நல்வரந்
தருதி யென்றிரு தாளினைப் போற்றினான். 23

வேறு

அந்தக னுரைத்த வார்த்தை யாவையு
மமலன் கேட்டுச்
சுந்தரப் பதாம்பு யத்தைத் தொழுதிடு
நமனை நோக்கிச்
சித்தனை தன்னில் யாவுந் தேறலா
நமனே யந்த
அந்தணன் பாவம் யாவு மழிந்தன
புனித னான். 24

இந்தவா றமைதற் கேது யாண்டுள
தென்பை யாயின்
மந்திரப் பொருளாம் நம்மை மாசிமா
மதியில் தோன்றுஞ்
சந்தத வபர பக்கச் சதுர்த்தசி
யதனிற் கண்டான்
சிந்தனை யுருகிப் போற்றத் தீவினை
கழிந்த தன்றே. 25

வேறு

எண்ணி லாவினை யெத்தனை கோடிகள்
பண்ணி னாலும் பரிவுடன் பண்டொர்நாட்
கண்ணி னஞ்சிவ ராத்திரி கண்டதால்
நண்ணி யெய்தினன் நம்பத மென்றனன். 26

வேறு

வேனில்வே ளெரிந்து வீழ விழித்தருள்
விமலா போற்றி
ஞானமாம் விரத மென்று நண்புடன்
நோற்ற தல்லப்
பானமுந் தசையுந் தின்று பாரியற்
குழற்குச் சூட்டக்
கானமா மலர்கள் கொய்ய கடிதினில்
வந்தா னையா. 27

என்னவே மறலி கூற ஈசன்புன்
முறுவல் செய்தே
தன்மனே யிரவி முன்னர்த் தமமென
லாகு மென்றே
மின்வளர் சடையர் யோகர் விளங்குமெய்ஞ்
ஞான தீக்கை
துன்னுசீ ரறிஞர் முன்னீ சேறலை
யென்று சொன்னான். 28

சங்கர னுரைப்பக் கேட்ட சண்டனுண்
மகிழ்ந்து போற்றிப்
பொங்கர வணிந்த நாதா பூரண
மனத்தி யானந்
தங்குபே ரொளியே யந்தச் சிவநிசித்
தகைமை யெல்லாம்
இங்கெனக் கருடி யென்ன இறைஞ்சியே
வணங்கி நின்றான். 29

ஆங்கவன் உரைப்பக் கேட்ட அண்ணலா
  ருவகை கொண்டு
பாங்கமர் மறலி கேட்பப் பகருவான்
  பருவி னேடும்
ஓங்கு சீர் இருவர் தேட ஒளிர்வளர்
  நிசிபு விக்கண்
நீங்கலின் மாதந் தோறும் நிலவுமெய்
  விரதந் தானே 30

மாசியி லபர பக்க மலிசதுர்த்
  தசியின் மிக்க
நேசமாய்க் கமல யோனி யருச்சனை
  நிரப்பி யுற்ருன்
பாசமார் பங்குனிக்கட் பதிபூர்வ
  திருதி யைக்கட்
கேசவன் பூசை செய்து கிளக்கலா
  வரம்பெற் றுய்ந்தான். 31

தேமொழி யுமையாள் மேடத் திங்களி
  னபர பக்க
நாமவட் டமியிற் பூசை நவையறப்
  புரிந்தாள் பானு
காமரு மிடப மாதங் கலைநிறை
  யட்ட மிக்கண்.
ஏமுறப் பூசை செய்தா னீசான
  ஞனி மாதம். 32

மதிநிறை சதுர்த்தி தன்னின் வழுத்தியர்ச்
சனைபு ரிந்தான்
புதுமயி லூர்தி யாடி மதிகுறை
பஞ்ச மிக்கண்
துதிகொள் பூசனை 'புரிந்தான் சோமனு
வணியின் மேவும்
விதமுறு பூர்வ பக்கத் தட்டமி
விழைந்து நோற்றான். 33

கன்னிசேர் பூர்வ பக்கம் கருதுபன்
மூன்று நாளில்
பன்னகாதிப னுந்துலை மதியம் பரவுசீர்த்
துவாதசி யதனில்
பொன்னு லாவிய பூண்முலைச் சசிம
ணாளனும் புரைதீர்
மின்ன னேரிடைக் கலைமகள் விருச்சிக
நிறைந்தசத் தமியின். 34

ஆவலாலெமைப் பணிந்தனர் தனுவி
னம்புலி நிறைசதுர்த் தசியின்
மேவு செந்துகிர் நிகரிதழ்
மனோன்மணி விரும்பியர்ச் சித்தாள்
ஓவில் தைமதிப் பூருவ
சதுர்த்தசி யுவந்தனன் னிடபன்
ஆவதாகவே பன்னிரு சிவநிசி
யாயின வென்பதை யறிநீ. 35

இந்த வாற்றினி னமைந்துள
சிவநிசி யென்னலா மிவற்றுள்
முந்து தைமதிச் சதுர்த்தசி
மருவிய முதன்மைசேர் திங்கள்
அந்த நாளுறிற் சிவநிசிமுக்
கோடியி னடைபல ருகுஞ்
சுந்தரஞ்செறி பானுவே வந்திடிற்
சொற்றிடுஞ் சிவநிசிக் கிணையே. 36

சொற்றி டுஞ்சிவ ராத்திரி
துகளருஞ் செகதல முய்யப்
பற்றி னுடைமைப் பூசனை
பண்ணிய பலனெலா முதவும்
பெற்றி கொண்டுள மாகவான்
றிங்களிற் பிறங்கிய தகைசேர்
கொற்ற மார்சிவ ராத்திரி
யதனுடை நிண்ணயங் கூறும். 37

பகலின் முப்பது கடிகையும்
பத்துமூன் ருய
நிகரில் வான்றிதி மருவியே
சதுர்த்தசி நேரில்
மகிமை சேர்தின மாகுமெய்ச்
சதுர்த்தசி வைகறையில்
திகழு மற்றைநாட் சேர்ந்திடின்
மத்திம நிசியே 38

தரிச மோடுறுஞ் சதுர்த்தசி
யதமமாய்ச் சாற்றும்
பரசு வோர்திர யோதசி
யொருகலை பற்றியேவரினும்
உரிய தோர்சிவ ராத்திரி
யாகவே யுவப்பர்
தெரிச சங்கமச் சதுர்த்தசி
சீவனில் சடமாம். 39

வேறு

சதுர்த்தசி நமது ரூபஞ் சத்தியின்
வடிவு மேன்மை
விதித்தபன் மூன்ற தான திதியென
விளம்ப லாகும்
மதித்தவிப் படியே சேரிற் சிவலிங்க
வடிவ மன்பர்
விதித்தநன் னியம முற்றிப் பாரணை
விரைந்து செய்வார். 40

தெரிச மோடுறுஞ் சதுர்த்தசி
சிரவண நாளில்
மருவி வந்திடின் வைதிகர்
விரத்தர்மற் றையர்க்கும்
உரிய தோர்அம வாசியாந்
தீங்குரு துவந்து
பெருகு மன்பொடு நோற்பவர்
நமதுருப் பெறுவார். 41

இந்த வாற்றினுற் சிவநிசிப்
பெருமையு மியாவும்
அந்தி வண்ணனு ருரைசெய
வந்தகன் கேட்டுச்
சுந்த ரஞ்செறி பதமலர்
சென்னியிற் சூட்டி
அந்த மில்லதோ ரன்புடன்
றன்னக ரடைந்தான். 42

## வேறு

வந்து தம்பதி யெய்திய மன்னவன்
அந்த மற்றதோ ராசன மீதினிற்
சிந்தை யின்பம தாகிச் சிறந்துபின்
எந்தை சொற்றன யாவையு மெண்ணினன் 43

எண்ணி மந்திர ரேவலர் யாவர்க்கும்
அண்ணல் சொற்றன யாவு மருளியே
புண்ணி யச்சிவ ராத்திரி பொற்புற
நண்ணி நோற்று நயந்தர சாண்டனன். 44

வேத வாய்மை விளங்கு முனிவிர்காள்
ஆதி தேவ னருள்வடி வாகிய
தீதி லாச்சிவ ராத்திரி செப்பிடிற்
பாத கம்பழி பாவம் அழிக்குமே. 45

தத்து வத்துறை கண்ட தபோதன
உத்த மர்க்கு முணர்வறை போகிய
பித்தி னர்க்கு மொருவழிப் பேரருள்
நித்த மீயும் அரநிசி யென்பவே. 46

சீத ரன்அயன் அர்ச்சனை செய்துபின்
மேத கும்பதம் பெற்றனர் வேடுவன்
ஏத மில்சிவன் மேனி யிறைஞ்சியே
பாத கந்தொலைந் தோங்கினன் பாங்கிலா. 47

வேட மெய்திய வேதியன் பண்டொர்நாள்
நீடு பூசனை கண்டு நிருமலன்
பீடு சேர்பதம் பெற்றன னந்தகன்
ஆடல் சான்மயல் நீங்கின னந்தணீர். 48

விரத ராச சிவநிசி மேன்மையைச்
சரத மீச னருள்கொடு சாற்றினேன்
வரத ஞான வசிகர மெய்யருள்
கரத லாமல கம்மெனக் காட்டுமே. 49

வேறு

சிவநிசிப் பெருமை தன்னைத் திருந்துறக்
கற்போர் கேட்போர்
உவமையி லிகப ரத்தி லுறும்பொருள்
யாவும் பெற்றே
பவனருட் சலதி தாழ்வர் பகருமிப்
புராணம் வைகும்
உவமையின் மனைக டோறுந் திருமக
ளுவந்து வாழும். 50

வேறு

மழைவ ழங்குக மன்னவ ரோங்குக
அழகு சேர்புவி யாகுக நல்லறம்
தழையும் ஐந்தெழுத் தோங்குக சங்கரன்
பழைய வைதிக சைவம் பரவவே. 51

இயமனுக்குச் சிவன் உபதேசித்த அத்தியாயம்

முற்றும்.



# சிவராத்திரி புராணம்

## பாட்டு முதற்குறிப்பகராதி

[ எண் – பக்கவெண் ]

